வெளியீடு எண் 377.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# மெய்கண்ட சாத்திரம்

## (சைவ சித்தாந்தம்)

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
25-ஆவது குரு மகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் அவர்கள்
பணித்தருளியவாறு இப் பதிப்பு வெளியிடப்பெற்றது.




1956 [தருமபுர ஆதீனம்

முதற் பதிப்பு 1942:
இரண்டாம் பதிப்பு 1956:

பதிப்பாளர் :-

தருமபுர ஆதீனம்
திருக்கடவூர்த் தேவஸ்தானம் கட்டளை விசாரணை
ஸ்ரீமத். மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

இப் பதிப்பைப் பல பிரதிகளுடன் ஆராய்ந்தவர்:
தருமபுர ஆதீனப் புலவர், சித்தாந்த சிரோமணி, சித்தாந்த ரத்நாகரம், மதுரகவி, முதுபெரும் புலவர்,
வித்துவான்
திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்

பதிப்பகம் :
ஞான சம்பந்தம் அச்சகம்,
தருமபுர ஆதீனம்.



திருநாரையூர்,
பொல்லாப் பிள்ளையார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

25-ஆவது குரு மகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களது

# நாள்மங்கல விழாமலர்

துன்முகி - ஐப்பசி 15

31—10—1956.



பதிகயி லாய பரம்பரை நந்திக்குக்
கதிதரும் கல்லாற் கடவுள்உப தேசம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருவேதுணை

# அணிந்துரை

'வெளி' என்பது வெள்ளென விளங்கும் பரப்பு. அதை விண், வான், விசும்பு, ஆகாயம் முதலிய பல சொற்களாற் குறிப்பர். அவ்வெளி 1. புறவெளி, 2. அகவெளி, 3. அறிவுவெளி, 4. அருள்வெளி என்று நான்காகும். புறவெளியினும் அகவெளி பெரியது. அதனினும் அறிவும், அதனினும் அருளும் பெரியனவாம். அருள்வெளியே ஏனைய மூன்றினும் பெரியது.

திருவருள் வெளியிலேயே யாவும் உள. 'அருள் வெளிக்குளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்' எனின், அதன் பெருமையை யாரே அளவிட வல்லார்?

"விண்ணிறைந்த வெளியாய்என் மனவெளியிற் கலந்தறிவாம்
வெளியி னூடும்
தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
தகையே நின்பால்
உண்ணிறைந்த பேரன்பால் உள்ளுருகி மொழிகுளறி
உவகை யாகிக்
கண்ணிறைந்த புனல் உகுப்பக்கரமுகிழ்ப்ப நின்னருளைக்
கருத்தில் வைப்பாம்"

(தாயுமானவர். பொருள் வணக்கம். 10)

'சுகாரம்பப் பெருவெளி' (ஷி 1) என்றவற்றில் முன் குறித்த வெளி பலவும் வெளியே. மறைவில்லை.

விண் வெளி மண்ணிலும் நீரிலும் தீயிலும் காற்றிலும் ஊடுருவி நிற்கின்றது. நிற்பினும், வெளிப்படையாகத் தெரிகின்றதோ? மண்ணைக் குடைந்து காண வெளிப் படும். நீருள் முழுக இடந்தரக் காணலாம். தீயிலும் தான் பற்றும் பொருளளவு வெளி உண்டு. தன்பால் அகப்பட்ட பொருட்குப் புறத்தே உலவும் காற்றிலும் அப் பொருளின் அளவு இடங்கொடுத்தது எது? வெளிதானே! அதுவே ஐம்பெரும் பூதங்களுள் ஒன்றுன விண் என்னும் மெய்ப் பொருள். அது பரப்பில் மண் முதலிய நான்கன்அளவினும் பெரியது. எல்லா மெய்ப்பொருளும் ஒடுங்கும் முறையில், சிறியது பெரியதில் ஒடுங்கும். தோன்றும் முறையில் பெரியதிலிருந்து சிறியது தோன்றும். அவை மாயையி னின்று தோன்றி ஒடுங்குகின்றன. அம் மாயை தங்கும் இடம் முழுமுதற் பொருளினது மறைப்பாற்றல் (திரோதான சத்தி). அதன் நிலையான வுருவம் திருவருள். திருவருளே உயிர்கட்கு அழுக்கு(மலம்)அகற்றித் தன்னைக் காட்டத் திரோதான சத்தியாகின்றது. திருவருள் கதிரொளியும் திரோ தானம் விளக்கொளியும் போலும்.

அவ் வருள்வெளியிலிருந்து விண்வெளிக்கு உட்பட்ட மண்ணுலகில் வாழும் மக்களுயிர்க்கு ஆசிரியர் வாயிலாக உணர்வு வரும் வழி(பரம்பரை)யே திருக்கைலாய பரம்பரை என வழங்கப் பெறுகின்றது. திருக்கைலாயம் அருள் வெளியில் இறைவன் வீற்றிருக்கும் இடம். அருள்வெளி யாகிய அப்பெருவெளியதே திருக்கைலாயம். மண்ணுலகிற் குத் திருவருள் விளங்கியது எவ்வாறு? அதுதான் அரு ளாறு. அருளாறு (ஞானபரம்பரை)தான் திருக்கைலாய



தருமபுர ஆதீன குருமுதல்வர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

பரம்பரை. ஞானம் என்றதால் எல்லாம் அப் பரம்பரையே எனத் துணிவர் பிறர். ஞானம் பல வேருய் விளங்குதலின், அப் பல்வேறு ஞானத்துக்கும் முதலாயுள்ள திருவருளாகிய சிவஞான பரம்பரை ஒன்றே திருக்கைலாய பரம்பரை ஆகும். ஏனைய ஞான பரம்பரையெல்லாம் முப்பத்தாறு தத்துவங் களுள் ஒன்ருன காலத்திற்குட்பட்டன ஆதலின், திருக் கைலாயத்தை எட்டிப் பார்க்கும் வன்மையில்லாதன.

திருக்கைலாயத்தில் இறைவன் திருநந்திதேவர்க்குச் சிவநேறியைஓதியருளினுன். அவர்சனற்குமாரமுனிவர்க்கும் அவர் சத்திய ஞான தரிசநிகட்கும், அவர் பரஞ்சோதி மாமுனிகட்கும் அருளினர். அந்நால்வரும் அகச்சந்தான குரவர் ஆவர். அப்பரஞ்சோதி மாமுனிகள் வானத்திற் செல்லுங்கால் மண்ணுலகில் இறங்கி, மெய்கண்டதேவ நாயனுர்க்கு அருளினுர். அவர் சகலாகம பண்டித ராய்த் திகழ்ந்த அருணந்திதேவ நாயனுர்க்கு அச் சிவஞான போதத்தை அருளினுர். அவ்வருளாசிரியர் 'சிவஞான சித்தி' என்னும் நூலைச் செய்தருளினுர். அது முதல், 'சிவநேறியைச் சிவஞான சித்தி நேறி' என்றனர். 'சிவஞான சித்திநேறி மவுனேபதேச குரு' என்றருளிய தாயுமானுர் திருவாய்மோழியாலும் அது விளங்கும்.

தருமைத் திருமடாலயத்தின் முதலாசிரியர் குருஞான சம்பந்தர். அவர்க்கு வாய்த்தது அச் சிவஞான சித்தி நேறி. அதனுல் அக் குருபரம்பரை திருக்கைலாய பரம்பரை என்பது நன்கு விளங்கும். இவ்வுண்மையைச் சிவஞானுநுபவம் உடையவரே உணர வல்லார். நூலறிவு மட்டும் உடையவர், வேறு எல்லாம் அறிய வல்லராயிருப் பினும், இவ்வுண்மையை உணர வல்லராதல் அரிது. நூல் மரபு வேறு. உபதேச மரபு வேறு.

"... ... ... ... ... ... ... ... முன்னாள்
இறைவன் அரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதில் அருட் சனற்குமா ரற்குக் கூறக்
குவலயத்தின் அவ்வழிஎம் குருநாதன்கொண்டு
தீதகல எமக்கு அளித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி என்றே"

என்று அருணந்திதேவ நாயனார் அருளியது கொண்டு திருக்கைலாய பரம்பரையின் உண்மையைத் தெளியலாம். 'அவ்வழி' 'ஞானநூல்' 'குருநாதன் கொண்டு அளித்த நூல்' என்றவை சிவஞான பரம்பரையை விளக்கி நிற்றல் அறிக.

அத்துவிதம் கூறும் சமயம் சிற்சிலவே. அவற்றுள், திருக்கைலாய பரம்பரையின் விளங்கும் அத்துவிதமே சுத்தம். அதனால் அது 'புநிதமேனும் அத்துவிதமெய்' எனப்பட்டது. படவே ஏனையர் அத்துவிதம் யாது எனலும் ஏனையர் கண்டதும் காணாததும் யாவை எனலும் தாமே புலனும். ஆகவே, 'போய்கண்டார் காணாப் புநிதமேனும் அத்துவித மெய்கண்டநாதன்' என்னும் உண்மைச் சீர்த்தி யுடையவராய் அவர் விளங்குவதில் யாதுதடை? அதுமுதல் சிவநெறியில் தோன்றிய அருள் நூல்களை 'மெய்கண்ட நூல்கள்' என்று உணர்வுடையோர் வழங்கி வந்தனர். அவ்வழக்கமே இன்றும் 'மெய்கண்ட சாத்திரம்' என்பதற்கு ஏதுவாயிற்று.

இம் மெய்கண்ட சாத்திரப் பதிப்பு, தருமையாதீனத்தின் வெளியீடுகளுள் 52-ஆவதாய் இருப்பினும் இரண்டாவது முறையாய் வெளிவருகின்றது. முதற்பதிப்பு, அடியேனை யும் ஆதீனப் புலவரேன ஆட்கொண்டருளிய இருபத்து



தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

நான்காவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணையினுல் வெளிவந்தது. அது கிடைத்தற்கு அரிதாயிற்று, அதனுல் அப்பெருமானுர் திருவடி மரபில் வந்து சிறந்து விளங்கும் இருபத்தைந்தாவது குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், 2-ஆவது முறையாகப் பதிப்பிக்க அருளினுர்கள். இப்பதிப்பு, சைவருலகிற்குச் சாலப்பயன் அளிக்கும். அப்பயன் அடையும் அனைவருமே இக்குரு நாதரை மறவார் ஆயின், அடியேனே மறப்பேன்? இக்குரு மணியின் பேருங்கருணை, ஆரணியிலிருந்தேனை இஞ்ஞான புரியில் இருத்தியது. பல்கலைக் கல்லூரியிற் பேராசிரியர் ஆக்கியது. 'ஞானசம்பந்தம்' அருளித் துணையாசிரியராக நியமித்தது. கல்லூரித் தலைமையைத் தந்தது. இவை எல்லாவற்றினும் சிறந்தது என்று அடியேன் உள்ளம் இன்பப் பெருங்கடலுள் திளைக்கும்படி, இம் மெய்கண்ட சாத்திரப் பதிப்பில் ஈடுபடுத்தியது. இத்தனையும் அருளிய அத்தனும் அச் சோக்கலிங்க மூர்த்திக்கு எத்தனை நன்றி யுடையேனே அறியேன்.

வாழ்க அவர் திருவடி மலர்கள். வயங்குக மடாலயங்கள். வளர்க சிவநேறி. வழங்குக மெய்கண்ட சாத்திரம். ஆழ்க தீயது. அரன் நாமமே சூழ்க எல்லா (வுயிர்களு)ம்.

அடியார்க்கு அடியன்,

தருமையாதீனம், 25—10—1956.

முத்து. சு. மாணிக்கவாசகன்.

# PREFACE.

The Fourteen Siddhantha Shastras are the most authoritative works expounding the Saiva Siddhantha System of philosophy. They belong to the 12th, 13th, and 14th centuries of the Christian Era. The first of them, *Tiruvunthiyar* is a short and cryptic work of Tiruviyalur Uyyavandadeva Nayanar written in 1147 A. D. It is composed in a very attractive metre, which children employ while singing to the butterfly and contains several philosophic maxima in mystic language. The style reminds one of the prince of mystics St. Tirumoolar. The next work, *Tiru-kalittru-ppadiyar* is the work of Tirukadavoor Uyyavandadeva Nayanar, written in 1117 A. D. It follows Tiruvunthiyar faithfully, and explains in a fuller measure the aphorisms of the earlier work. These two works are in a way, the precursors of Meikanda Deva's classical and immortal work.

The most important of the fourteen group is undoubtedly Meikanda Deva's *Sivagnana Bodham.* The Life of Meikanda Deva and the origin of his work are too well known to need repetition. He belonged to the first half of the 13th century A. D. In recent times, a good deal of research has been directed to the

question, whether Meikanda Deva is an original author or a mere translator. The older orthodox view seems to be that he found the original in twelve sanskrit sutras of the Raurava Agama, while the modern view holds that there is considerable disparity between the sanskrit sutras and his own sutras and vital difference in many essential aspects. A decision on this question, acceptable to all parties, has yet to be made.

Meikanda Deva stands at the head of the *Santhana Paramparai*. His preceptor, St. Paranjothi is the last link in the Celestial Chain (called the Aghachandanam). Arulnandi Sivacharya, who was Meikanda's father's family preceptor, became the cheif disciple of Meikanda Deva. His elaborate treatise, the *Sivagnana Siddhiyar* deals exhaustively with the tenets of other systems of philosophy, refutes the conclusions which they adumbrate, sets out in great detail the doctrines if the Saiva Siddhantha System, and takes care to answer all the criticisms which could possibly be levelled against them. It is thus a very valuable piece of polemical literature.' Arulnandhi Sivacharya is also the author of the *Irupa Irupahthu* which contains many eulogistic references to his master.

Among the forty-nine disciples of Meikanda Deva was one Manavachakam Kadanthar of Tiruvathikai. whose book called the *Unmai Vilakkam* ranks as the

sixth of the series. It is a manual which catalogues the tatwas, deals with the Panchakshara as embodied in the Nataraja idol, and the way to salvation.

Umapathy Sivacharya, one of the traditional-three-thousand-priests of the Chidambaram Temple is a prolific author who accounts for the remaining eight of the series. These eight go by the collective name of *Siddhantha Ashtakam*. Of these *Sivaprakasam* stands foremost, and *Tiruvarul Payan* and *Sankalpa Nirakaranam* come next; *Vinavenba, Pottrippahrodai, Kodikkavi, Nenjuviduthoothu, and Unmainerivilakkam* are the remaining five. These five are small pieces dealing with some special aspects of the system. There is a tradition about the occasion for singing the Kodikkavi. The author gives the saka year for the composition of *Sankalpa Nirakaranam* as 1235 from which its date has been calculated as 1313 A. D.

Of these fourteen shastras, Sivagnana Bodham, Sivagnana Siddhiyar and Sivaprakasam are the three mostly studied and referred to by other authors. They form a class by themselves and are respectively called the Primary, the Secondary, and the Derivative (முதல், வழி, சார்புநூல்கள்), and it is for these three works that we find several commentaries. Of all the commentaries on the Sivagnana Bodham the best is the Bashyam of Sivagnana Swamigal. An unpublished commentary on the Sivagnana Siddhiyar called the

*"Gnanabbaranavilakkam" by Sri-la-Sri Velliambalavana Munivar of the Dharmapuram Mutt is the most exhaustive treatise based on this work. The best commentary on the Sivaprakasam is that of Sivaprakasa Swamigal of Madurai.

Let us now pass on to consider some of the eternal truths which the fourteen shastras teach us. From very ancient times, man has studied the environments around him, postulated the existence of God, listed His actions and attributes, discussed the relationship of the Universe unto Himself, and prayed to God to bless him with eternal happiness. All men are not alike, so are their thoughts and conclusions. We therefore find considerable divergence of opinion on several of these fundamental matters. The fourteen shastras divide the Universe into three eternal categories Pati, Pasu and Pasa. They co-exist for all times. Of these Pati or God has two aspects, the transcendental and the immanent. He has eight attributes namely self control, purity, intuition, omniscience, freedom, grace, omnipotence, and happiness. All these are perfect and absolute in Him. He is the Supreme Lord of the Universe and the Supreme Regulator of the destinies of the soul. He is the Supreme Director of the Panchakrityas or the five great cosmic actions (Creative Evolution, Protection, Transformative Extinction, Involution and Blissful Absorption). In all these

*The Work is in Press.

actions He is indissolubly united to Shakti. He is the Efficient Cause, His Shakti is the Instrumental Cause, and Maya the Material Cause. This theory of causation is based on Sata-Karyavadha and differs from other theories like the Maya-vadha and the Ekatmavadha.

The soul is as perennial as God Himself. It has five stages of consciousness called the Jagratha, the Swapna, the Sushupti, the Turiya, and the Turiya-theetha. In these stages, it is related to the 96 tatwas in various groups. The soul is called Pasu because it is in immemorial bondage. Deliverance from this bondage is the working of Pasa which is subdivided into Anava, Karma, and Maya. These are the three malas or impurities. Anavamala is the root cause of the soul's misery and is also called the Moola Mala. It may, in a way, be likened to the instinct of self-assertion found in the human and other species of creation. Maya is the great cosmic illusion and karma is the chain of action and reaction. Though all the three are bonds or bandhas, they differ among themselves in this way that Anava is Pratibandha (the Inimical Bond), Maya is Sambandha (the allied Bond), and Karma is Anubanda (the Appendix Bond). When these bonds fall off, the soul passes through three definite stages viz., Iruvinai-oppu or Samatwa Buddhi, Malaparibhaga and Saktini-padha, and becomes a Jeevanmukta and attains Sayujya.

There are four well defined processes by which the above results are achieved in easy grades. These

processes are known as Charya, Kriya, Yoga, and Gnana. Each of these has four sub-divisions bearing these very names. These sixteen grades, like the steps of a ladder, are discussed in detail and the benefits which the soul derives from them are clearly defined. The company of salved souls, the wills desires and actions of such souls, and the ways in which God bestows His grace on them are all clearly set. out The essence of Panchakshara or the holy Five Letters, the methods of chantation and their effect on the soul and its encasement are all set out in great detail, in such a way, that it takes one's breath away.

The importance of a spiritual preceptor, the indispensable necessity for his initiation and upadesa, and the methods which he adopts are fully described and none is left in doubt as the futility of unaided self-endeavour.

These and hundreds of other matters are found in the Fourteen Shastras. They represent the cream of Tamilian thought and Tamilian self realisation. They are unique in several respects and go far beyond the limits which other well known systems have reached.

The Dharmapuram Adheenam deserves the grateful thanks of the saivite world for bringing out this bare text edition of the *Fourteen Shastras* and for marking a very low price for the book in these troublous times of paper scarcity. The present head of the Mutt is

doing his level best for the propagation of the Saiva-faith in all possible ways. The series of publications which has seen the light of day, since the ascent of His Holiness Sri - la - Sri Shunmuga Desika Gnanasambanda Paramacharya Swamigal on the holy gadi of the Dharmapuram Adheenam Mutt, has served to dispel darkness in the minds of hundreds of saivites and has flooded them with the light of the Lord The present publication will rank along with these and occupy a very prominent place.

May the authors of the Fourteen Shastras and the Lord whose grace they abound in, bless all the readers of this book and bestow on them the choicest favours. May peace prevail in every quarter of the Globe.

Om Shanti ! Shanti ! ! Shanti ! ! !

Mylapore,
5—12—42.

M. Balasubrahmanya Mudaliar, (B. A., B. L.,)
Advocate & Honorary Secretary of
The Madras Saiva Siddhantha Mahasamajam.



போய்கண்டார் காணப் புநிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்அருள் விளங்குந் திருக்கோலம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருவியலூர் உய்யவந்ததேவ நாயனுர்

அருளிச்செய்த

# 1. திருவுந்தியார்

அகளமா யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானுகத் தந்ததென் றுந்தீபற. 1

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பேணே உந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற. 2

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற. 3

[1]இங்ஙு னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙு னிருந்ததென் றுந்தீபற
அறியும் [2]அறிவதன் றுந்தீபற. 4

---

[1]எங்ஙன். [2]அறிவதென்று.

ஏகனு மாகி அநேகனு மானவன்
நாதனு மானானேன் றுந்தீபற
நம்மையே ஆண்டானேன் றுந்தீபற. 5

நஞ்சேய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
தன்சேயல் தானேயேன் றுந்தீபற
தன்னையே [1]தந்தானேன் றுந்தீபற. 6

உள்ளம் [2]உருகில் உடனாவர் அல்லது
தேள்ள அரியரேன் றுந்தீபற
சிற்பரச் சேல்வரேன் றுந்தீபற. 7

ஆதாரத் தாலே நிராதாரத் தேசேன்று
மீதானத் தே[3]சேல்க உந்தீபற
விமலற் கிடமதேன் றுந்தீபற. 8

ஆக்கில்அங் கேயுண்டாய் அல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற் [4]பரமதன் றுந்தீபற
[5]பாவனைக் கேய்தாதேன் றுந்தீபற. 9

அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
துய்ய போருளீதேன் றுந்தீபற. 10

தாக்கியே தாக்காது நின்றதோர் [6]தற்பரம்
நோக்கிற் குழையுமேன் றுந்தீபற
[7]நோக்காமல் நோக்கவேன் றுந்தீபற. 11

1 தந்ததேன்று. 2 உருகி. 3 சேல. 4 பரமதேன்று. 5 பாவனைக் கேய்தான். 6 தற்பரன். 7 நோக்காமை நோக்குமேன்று.

மூலே யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பேரியரேன் றுந்தீபற
தவத்தில் தலேவரேன் றுந்தீபற. 12

ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவம் உந்தீபற
தேடும் [1]இடமதன் றுந்தீபற. 13

கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி
உடந்தை யுடனேநின் றுந்தீபற
உன்னேயே கண்டதேன் றுந்தீபற. 14

பற்றை அறுப்பதோர் பற்றினேப் பற்றில்அப்
பற்றை அறுப்பரேன் றுந்தீபற
[2]பாவிக்க வாராரேன் றுந்தீபற. 15

உழவா துணர்கின்ற யோகிகள் ஒன்றேடுந்
[3]தழுவாமல் நிற்பரேன் றுந்தீபற
[4]தாழ்மணி நாவேபோல் உந்தீபற. 16

திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனேக் கும்பிடேன் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற. 17

மருளுந் தேருளும் மறக்கும் அவன்கண்
அருளே [5]மறவாதே உந்தீபற
அதுவேயிங் குள்ளதேன் றுந்தீபற. 18

---

[1]இடமதேன்று. [2]பாவிக்கில் வாராதேன்று. [3]தழுவாது. [4]தாழ்ந்த மணிநாப்போல். [5]மறவாதேன்று. 14, 15 ஆம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறியிருக்கின்றன.

கருத்துவ தன்[1]முன் கருத்தழியப் பாயும்
ஒருமகள் கேள்வனேன் றுந்தீபற
உன்ன அரியனேன் றுந்தீபற. 19

இரவு பகலில்லா இன்பவெளி யூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற. 20

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்கு
அல்லனாய் ஆனானேன் றுந்தீபற
அம்பிகை பாகனேன் றுந்தீபற. 21

காற்றினை மாற்றிக் கருத்தைக் [2]கருத்தினுள்
[3]ஆற்றுவ தாற்றலேன் றுந்தீபற
[4]அல்லாத தல்லலேன் றுந்தீபற. 22

கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமேன் றுந்தீபற
வீடும் எளிதாமேன் றுந்தீபற. 23

எட்டுக்கொண்டார் தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டார் உலகமேன் றுந்தீபற
வீடேவீ டாகுமேன் றுந்தீபற. 24

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
ஒத்ததே ஒத்ததேன் றுந்தீபற
ஒவ்வாத தொவ்வாதேன் றுந்தீபற. 25

[1] முன்னங். [2] கருத்தினில். [3] ஆற்றுதல். [4] அல்லாத தல்லா தென்று.

உள்ளும் புறம்பும் [1]நினைப்பறில் உன்னுள்ளே
மோள்ளா அமுதாமேன் றுந்தீபற
முளையாது பந்தமேன் றுந்தீபற. 26

அவிழ இருக்கும் [2]அறிவுடன் நின்றவர்க்கு
அவிழும்இவ் வல்லலேன் றுந்தீபற
அன்றி அவிழாதேன் றுந்தீபற. 27

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களேன் றுந்தீபற
[3]பேறுவதங் கேன்பேணே யுந்தீபற. 28

சோல்லும் இடமன்று சோல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக்கேன் றுந்தீபற
என்றால்நாம் என்சேய்கோம் உந்தீபற. 29

வீட்டில் இருக்கிலேன் நாட்டிலே போகிலேன்
கூட்டில்வாள் சார்த்தி[4]நின் றுந்தீபற
கூடப் படாததேன் றுந்தீபற. 30

சாவிபோம் மற்றைச் சமயங்கள் [5]புக்குநின்று
ஆவி [6]யறாதேயேன் றுந்தீபற
அவ்வுரை [7]கேளாதே உந்தீபற. 31

துரியங் கடந்தஇத் தோண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதேன் றுந்தீபற
[8]துறந்தார் அவர்களேன் றுந்தீபற. 32

---

1 நினைப்போழியினுள்ளே, நினைப்பறின்நின்னுள்ளே, நினைப்போழியில் உன்னுள்ளே. 2 அறிவுடையார்கட்கு. 3 பேறுவதிங்கு. 4 என்று. 5 புக்கிருந்து. 6 அறாததேன்று. 7 கேளாதேன்று. 8 துறத்தார்.

பெற்றசிற் றின்பமே [1]பேரின்ப மாம்அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது [2]பந்தம்என் றுந்தீபற. 33

பேரின்ப மான பிரமக் கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளானேன் றுந்தீபற
உன்னையே [3]ஆண்டானேன் றுந்தீபற. 34

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரேன் றுந்தீபற
காணுதார் காணுரேன் றுந்தீபற. 35

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாமேன் றுந்தீபற
நாதற் கிடமதேன் றுந்தீபற. 36

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
[4]நீசெயல் [5]செய்யாதே உந்தீபற. 37

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீயறிந் துந்தீபற
அறிந்தறி யாவண்ணம் உந்தீபற. 38

அதுஇது [6]என்னு தனைத்தறி வாகும்
அதுஇது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த [7]சடையாரேன் றுந்தீபற. 39

---

[1]பேரின்பமாய். [2]மாயை. [3]ஆண்டதேன் றுந்தீபற.
[4]நீசில. [5]செல்லாதே. [6]என்னு. [7]சடையான்.

அவனிவ னான[1]தவனருளா லல்லது
இவனவ னாகானேன் றுந்தீபற
என்றும் இவனேயேன் றுந்தீபற. 40

முத்தி [2]முதலுக்கே மோகக் கோடிபடர்ந்து
அத்தி பழுத்ததேன் றுந்தீபற
அப்பழ முண்ணாதே உந்தீபற. 41

அண்ட [3]முதலாம் அனைத்தையும் உட்கோண்டு
கோண்டத்தைக் கோள்ளாதே உந்தீபற
[4]குறைவற்ற செல்வமேன் றுந்தீபற. 42

[5]காயத்துள் மேய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரேன் றுந்தீபற
வறட்டுப் பசுக்களேன் றுந்தீபற. 43

சிந்தையி னுள்ளும்என் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவேன் றுந்தீபற
மடவா ளுடனேயேன் றுந்தீபற. 44

வைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை உந்தீபற
உண்மை யுணர்ந்தாரேன் றுந்தீபற. 45

---

[1]அவனருளல்ல(து). [2]முதற்கோடி. [3]முதலாய். [4]குறைவற நின்றதேன்று, குறைவற்று நிற்றதேன்று. [5]காயத்து.

## திருவுந்தியார் கருத்துள்ள திருக்களிற்றுப்படியார் திருவெண்பாக்கள்

| உந்தியார் | களிற்றுப்படியார் | உந்தியார் | களிற்றுப்படியார் |
|---|---|---|---|
| 1 | 4 - 5 | 23 | 42 - 43 |
| 2 | 6 - 7 | 24 | 44 - 45 |
| 3 | 8 | 25 | 46 - 50 |
| 4 | 9 - 10 | 26 | 51 - 52 |
| 5 | 11 | 27 | 53 - 56 |
| 6 | 12 - 13 | 28 | 57 |
| 7 | 14 - 21 | 29 | 58 - 62 |
| 8 | 22 | 30 | 63 - 64 |
| 9 | 23 - 24 | 31 | 65 - 68 |
| 10 | 25 | 32 | 69 - 75 |
| 11 | 26 | 33 | 76 |
| 12 | 27 - 28 | 34 | 77 |
| 13 | 29 | 35 | 78 - 79 |
| 14 | 30 | 36 | 80 - 81 |
| 15 | 31 | 37 | 82 - 83 |
| 16 | 32 | 38 | 84 |
| 17 | 33 | 39 | 85 - 91 |
| 18 | 34 | 40 | 92 |
| 19 | 35 | 41 | 93 - 94 |
| 20 | 36 - 37 | 42 | 95 - 96 |
| 21 | 38 - 40 | 43 | 97 - 99 |
| 22 | 41 | 44 | 100 |

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனுர்

அருளிச்செய்த

# 2. திருக்களிற்றுப்படியார்

---

அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் [1]நிற்பார் அவர். 1

தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மில் தலைப்படுதல் தாமுணரின் - தம்மில்
நிலைப்படுவர் ஒரிருவர் நீக்கிநிலை [2]யாக்கித்
தலைப்படுவர் தாம்அத் தலை. 2

என்னறிவு சென்றளவில் யானின்று அறிந்தபடி
என்னறிவி லாரறிக என்றேருவன் - சொன்னபடி
சொல்லக்கேள் என்றேருவன் சொன்னுன் எனக்கதனைச்
சொல்லக்கேள் யானுனக்கச் சொல். 3

---

[1]நிற்பர். [2]ஆக்கில், ஆகத்.

அகளமய மாய்நின்ற அம்பலத்தேங் கூத்தன்
சகளமயம் போல்உலகில் தங்கி - நிகளமாம்
ஆணவ மூல மலம்அகல [1]ஆண்டனன்கண்
மாணவக என்னுடனுய் வந்து. 4

ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே யுணர்வெங்கே - பாகத்து
அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பேருவடிவை யாரறிவார் பேசு. 5

சாத்திரத்தை [2]ஓதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே [3]வாய்க்குநலம் [4]வந்துறுமோ - ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் [5]தணிந்திடுமோ
தேண்ணீர்மை யாய்இதனைச் சேப்பு. 6

இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்
நின்ற மலமனைத்தும் [6]நீக்குவதிங் - கென்றால்
உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்
உருவருள வல்லான் [7]உரை. 7

கண்டத்தைக் கோண்டு கருமம் முடித்தவரே
[8]அண்டத்தின் அப்புறத்த தேன்றதே - அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும் ஆறறிவுஞ் சேன்றறியும்
எப்புறமும் கண்டவர்கள் இன்று. 8

---

[1]ஆண்டான்காண். [2]ஓதவே. [3]வாய்த்தவளம். [4]வந்துறுமே. [5]தணிந்திடுமே. [6]நீங்குவதேங்கு, நீக்கினதாங்கு. [7]உணர். [8]அண்டத்ததப்புறத்தது.

அன்றுமுதல் ஆரேனும் ஆளாய் உடனுகிச்
[1]சென்றவர்க்கும் இன்னதேனச் சென்றதிலே - இன்றிதனை
[2]யிவ்வா றிருந்ததேன் றேவ்வண்ணஞ் சொல்லுகேன்
அவ்வா றிருந்த தது. 9

ஒன்றுங் குறியே குறியாத லால்அதனுக்
கோன்றுங் குறியோன் றிலாமையினுல் - ஒன்றூே
டுவமிக்க லாவதுவுந் தானில்லை [3]ஒவ்வாத்
தவமிக்கா ரே[4]யிதற்குச் சான்று. 10

ஆற்றுல் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றிஅவ் வாற்றுன் மறித்தாற்போல் - தோற்றிப்
புலன்களேனப் போதம் [5]புறம்போழியும் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து. 11

பாலைநேய்தல் பாடியதும் பாம்போழியப் பாடியதும்
காலனை அன் றேவிக் கராங்கோண்ட - பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண். 12

தூங்கினரைத் [6]தூய சயனத்தே விட்டதற்பின்
தாங்களே சட்ட உறங்குவர்கள் - ஆங்கதுபோல்
ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதற்பின் அப்போருளாய்ப்
பைய விளையுமேனப் பார். 13

உள்ள முதலனைத்தும் [7]ஒன்ற ஒருவவரில்
உள்ளம் உருகவந் [8]துன்னுடனும் - தேள்ளி
உணருமவர் தாங்கள் [9]உளராக என்றும்
[10]புணருமவ னில்லாப் போருள். 14

---

[1]சென்றவர்க்குள். [2]எவ்வாறு. [3]ஓவாத். [4]அதற்குச். [5]புறம்போழியில். [6]துய்ய. [7]ஒன்ற உருகவரில், ஒன்ற உருக வரும், ஒன்றுய் உருகவரின். [8]துன்னிடனும். [9]உளராகில். [10]புணருவானில்லாப்.

நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் [1]நானழியும் - வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே [2]தலைப்படுங்காண்
ஆரேனுங் காணா அரன். 15

மேல்வினையே யென்ன [3]வியனுலகில் ஆற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டும் - சொல்லிற்
சிவதன்மம் [4]ஆம்அவற்றிற் சென்றதிலே [5]செல்வாய்
பவகன்மம் நீங்கும் படி. 16

ஆதியை [6]அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே
தீதில் திறம்பலவும் [7]செய்வனவும் - வேதியனே
நல்வினையாம் [8]என்றேம் நமக்கும்எளி தானவற்றை
மேல்வினையே என்றதுநாம் வேறு. 17

வரங்கள்தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினால் அன்றுகறி யாக்க - இரங்காதே
கோல்வினையே செய்யுங் கொடுவினையே [9]யானவற்றை
வல்வினையே என்றதுநாம் மற்று. 18

பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டும் - சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
தண்டீசர் தஞ்செயலால் தான். 19

---

[1]நானழிய. [2]தலைப்படுவன். [3]வியனுள்ளார்கட்கரிய, வியனுலகுளோர்க்கரிய. [4]ஆகுமிதிற், ஆமதினிற். [5]செல்வார். [6]அர்ச்சித்தாறங்கமும். [7]செப்பினவும். [8]இன்று. [9]யானதனை. 19 ஆம் பாட்டு பிரதிகளில் முன் பின்னாக மாறியிருக்கின்றது.

செய்யில் உகுத்த திருப்படி மாற்றதனை
ஐய இதுஅமுது [1]செய்கென்று - பையவிருந்து
ஊட்டி அறுத்தவர்க்கே ஊட்டி அறுத்தவரை
நாட்டியுரை [2]செய்வதென்னோ நாம். 20

செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டார் - ஐயா
உழவும் [3]தரிசும் ஒருமுகமே யானால்
இழவுண்டோ சொல்லாய் [4]இது. 21

ஆதார யோகம் நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே - ஆதாரத்து
ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம் ஒன்று
ஆக்காப் பொருளேஒன் றும். 22

ஆக்கி ஒரு[5]பொருளை ஆதாரத் தப்பொருளை
நோக்கி அணுவில் அணு[6]நெகிழப் - பார்க்கில்
இவனுகை [7]தானொழிந்திட் டேகமாம் ஏகத்து
அவனுகை ஆதார மாம். 23

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
[8]கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட
இருபொருளும் [9]அன்றியே இன்னதிது [10]என்னாது
ஒருபொருளே யாயிருக்கும் உற்று. 24

---

[1]செய்கவெனப். [2]செய்வதே. [3]தனுசும், தனிசும். [4]இதற்கு. [5]பொருளா. [6]நிகழப் பார்க்கில், நிகழப் பார்க்க. [7]காணொழிந்திட்டு. [8]கொண்டதுவும். [9]இன்றியே. [10]என்னா. 20 ஆம் பாட்டு பிரதிகளில் முன் பின்னாக மாறியிருக்கின்றது.

அஞ்செழுத்து மேஅம்மை அப்பர்தமைக் காட்டுதலால்
அஞ்செழுத்தை ஆருகப் [1]பேற்றறிந்தே - அஞ்செழுத்தை
ஓதப்புக் குள்ள மதியுங் கேடில்உமைகோன்
கேதமற [2]வந்தளிக்குங் கேள். 25

ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினிலும்
தாக்கித்தான் ஒன்றேடும் தாக்காதே - நீக்கியுடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனுய்
[3]நிற்கை நிராதார மாம். 26

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்ருர் காட்சியறக் கண்ணுதலைக் - காண்கின்ருர்
காண்பானுங் காணப் படும்பொருளும் [4]அன்றியே
காண்கையினுற் கண்டனரோ காண். 27

பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான் - பேசாதே
எண்ணுென்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்
உண்ணின்றும் போகான் உளன். 28

ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற இடஞ்சிவமாம் - [5]நாட்டற்று
நாடும் பொருளனைத்தும் நாளு விதமாகத்
தேடுமிடம் அன்று சிவம். 29

---

1பேற்றிருந்தும், பேற்றிருந்தவ். 2வந்தளிப்பன். 3நிற்க. 4இன்றியே. 5நாட்டுற்று. 25, 26 ஆம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறியிருக்கின்றன.

உணராதே யாதும் உறங்காதே [1]உன்னிப்
புணராதே நீபோதுவே நிற்கில் - உணர்வரிய
காலங்கள் சேல்லாத [2]காலத்துடன் இருத்தி
காலங்கள் மூன்றினையும் கண்டு. 30

பற்றினுட் பற்றைத் துடைப்பதோரு பற்றறிந்து
[3]பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - [4]பற்றதனைப்
பற்றுவிடில் அங்நிலையே தானே பரமாகும்
[5]அற்றமிது சொன்னேன் [6]அறி. 31

அறிவறிவாய் நிற்கில் அறிவுபல வாமேன்று
அறிவின் அறிவவிழ்த்துக் கோண்டவ் - வறிவினராய்
வாழ்ந்திருப்பர் [7]நீத்தோர்கள் மானுடரின் மாணவகா
தாழ்ந்தமணி நாவேபோல் தான். 32

ஒசையேலாம் அற்ருல் ஒலிக்குங் திருச்சிலம்பின்
ஒசை [8]வழியேசேன் ருேத்தோடுங்கின் - [9]ஓசையினின்
அந்தத்தா னத்தான் அரிவையுடன் அம்பலத்தே
[10]வங்தோத்தா னத்தான் மகிழ்ந்து. 33

‡சார்புணர்ந்து சார்பு கேடவோழுகின் என்றமையால்
[11]சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு
கேடவோழுகல் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று. 34

---

[1]உன்னிற். [2]காதலுடன். [3]பற்றைப். [4]பற்றதனிற் பற்றிவிடில். [5]மற்றம், மற்றும். [6]மதி. [7]நீத்தவர்கள். [8]வழிச்சேன்றங் கோத்தோடுங்கின். வழியோற்றிச் சேன்ருேத்தோடுங்கில். [9]ஓசையுடன். [10]வங்தத்தானத்தான். [11]சார்புணரத். சார் புணர்வு. 30, 31ஆம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்ஞக மாறியிருக்கின்றன. ‡ குறள் மெய்யுணர்தல் 9.

அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடி யே[1]நிற்க முன்னிற்கும் - சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு. 35

உண்டேன்னில் உண்டாகும் இல்லாமை இல்லையேனில்
உண்டாகும் ஆனமையில் ஓரிரண்டாம் - உண்டில்லை
என்னும் [2]இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்[3]வகை
உன்னில்அவன் உன்னுடனே யாம். 36

தூல உடம்பாய முப்பத்தோர் தத்துவமும்
மூல [4]உடம்பாம் முதல்நான்கும் - மேலைச்
சிவமாம் பரிசினையுந் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த
பவமாம் [5]பரிசறுப்பார் பார். 37

எத்தனையோ தத்துவங்கள் எவ்வேவர்கோட் பாடுடைய
அத்தனையும் சென்றங்(கு) அளவாதே - சித்தமேனும்
[6]தூதுதனைப் [7]போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற்
பாதிதனைக் கும்பிடலாம் பார். 38

வஞ்சகி

சாம்[8]பொழுதில் ஏதும் சலமில்லை சேத்தாற்போல்
ஆம்பொழுதி லேஅடைய ஆசையறில் - [9]சோம்பிதற்குச்
சொல்லுந் [10]துணையாகும் சொல்லாத தூய்நேறிக்கட்
செல்லும் துணையாகும் சென்று. 39

[1]நிற்கில். [2]அவை. [3]நிலை என்னில் அவனுடனே. [4]உடம்பாய, [5]துரிசறுப்பார். [6]தூதுவனைப். [7]போக்கிற்போய்த். [8]பொழுதும். [9]சோம்பு. [10]துணையாகச்.

[1]வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
*வேண்டின்அஃ தோன்றுமே வேண்டுவது - வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால். 40

அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில்
கரணமும் காலும்கை கூடும் - புரணமது
கூடாமை யுங்கூடும் கூடுதலுங் கூட்டினுக்கு
வாடாமை யுங்கூடும் வந்து. 41

இன்றிங் கசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும்
சென்று [2]தோடருமவன் சேன்றிடத்தே - என்றுந்தான்
[3]தீதுறுவன் ஆனுல் [4]சிவபதிதான் கைவிடுமோ
மாதோருகூ றல்லனே மற்று. 42

அநாதி சிவனுடைமை யால்எவையும் ஆங்கே
அநாதி யேனப்பேற்ற அணுவை - அநாதியே
ஆர்த்த துயரகல அம்பிகையோடு எவ்விடத்தும்
காத்தல் அவன்கடனே காண். 43

தம்மிற் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பாம் மஞ்சனநீர் தாமாட்டித் - தம்மையோரு
[5]பூவாக்கிப் [6]பூவழியா மற்கோடுத்துப் பூசித்தால்
[7]ஒவாமை யன்றே உளன். 44

---

[1]வேண்டும். [2]தோடருமிவன். [3]தீதோருவன். [4]சிவாபதி. [5]பூவாகப். [6]பூவழியாதே, பூவோழியாதே. [7]ஓவாதேயாங்கே உளன்.

*குறள் - அவாவறுத்தல் 2.

தன்னைப் பெறுவதன்மேற் பேறில்லைத் தானென்றும்
தன்னைத்தான் பெற்றவன்தான் ஆரென்னில் - தன்னாலே
எல்லாந்தன் னுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
எல்லாமாய் நிற்கு மிவன். 45

துன்பமாம் எல்லாம் [1]பரவசனாய்த் தான்துவளில்
இன்பமாம் [2]தன்வசனா யேயிருக்கில் - என்பதனால்
நின்வசனா யேயிருக்கில் [3]நின்னுடனும் நேரிழையாள்
தன்வசனா யேயிருப்பன் தான். 46

சேத்தாரே கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனோ
டோத்தாரே யோக[4]பர ரானவர்க - ளோத்தாலு
மாராத வக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
பேராமற் செல்வர்அதன் பின். 47

கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங்
கண்ணுங் கருத்துங் களிகூர - நண்ணி
வடமடக்கி நிற்கும் வடவித்தே போல
உடனடக்கி [5]நிற்பர்கா ணுற்று. 48

வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
யூனகத்தே யுன்னுமதே [6]னென்றனையேல் - யானகத்து
வாதனையை மாற்றும் வகையதுவே மண்[7]முதலா
வாதனமே யன்றோ வதற்கு. 49

---

[1]பரவசமாய்த். [2]தன்வசமாய்த், தன்வசனாய்த்தானிருக்கில். [3]நின்வசமாம். [4]பராரானார். [5]நிற்பர்கள். [6]என்றமையால். [7]முதலாம்.

கல்லிற் கமரிற் கதிர்வாளிற் சாணையினில்
வல்லுப் பலகையினில் வாதனையைச் - [1]சொல்லு
மகமார்க்கத் தாலவர்கண் மாற்றினர்கா ணையா
சகமார்க்கத் தாலன்றே தான். 50

உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே
வள்ள லெழுந்தருளு மாதினொடுங் - தெள்ளி
அறிந்தொழிவா யன்றியே யன்புடையை [2]யாகிச்
செறிந்தொழிவா யேதேனுஞ் செய். 51

†கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பினைக் - கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்று
[3]யாமறியு மன்பன் றது. 52

அவிழ்ந்த துணியி லவிழ்ந்த வவிழை
அவிழ்ந்த மனத்தா லவிழ்க்க - வவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனார் செய்த செயல். 53

சுரந்த திருமுலைக்கே துய்ய[4]சிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் - சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு. 54

---

[1]சொல்லில். [2]ஆயின். [3]ஆரறியும். [4]திருஞானம்.

†திருவாசகம். திருக்கோத்தும்பி. 4.

அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழியு - மன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாஞ்
[1]சார்த்தும் பழமன்றே தான். 55

எல்லா ரறிவுகளின் ருற்பரிய மேன்னறிவு
செல்லு மிடத்தளவுஞ் சென்றறிந்தேன் - வல்லபடி
வாதனையை மாற்றும் வகையிதுவே மற்றவற்று
ளேதமறக் கண்ட திது. 56

வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெய்ஞ்ஞானம்
வித்துமத னங்குரமு மெய்யுணரில் - வித்ததனிற்
காணுமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணுமை யாலற்ருர் பேறு. 57

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று [2]நானன்று - நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான். 58

செய்யாச் செயலையவன் செய்யாமற் செய்ததனைச்
செய்யாச் செயலிற் செலுத்திரு - லெய்யாதே
மாணவக வப்பொழுதே வாஞ்சைக் கோடிவளர்க்கு
மாணவமு [3]மற்ற தறி. 59

---

[1]சாற்றும். [2]நானேன்று. அற்ருல், இத்தால்,

ஏதேனுங் காலமுமா மேதேனுந் தேசமுமா
மேதேனுந் திக்கா சனமுமா - மேதேனுஞ்
[1]செய்த லொருவலுமாஞ் செய்யாச் செயலதனைச்
செய்யாமற் செய்யும் பொழுது. 60

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துபல
ரெய்தற் கரியதனை யெய்தினர்க - ளையோநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு. 61

இப்பொருள்கள் யாதேனு மேதேனு மொன்றுசெய்த
லெப்பொருளுஞ் செய்யா தொழிந்திருத்தன் - மெய்ப்
[பொருளைக்
கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரேலா
முண்டிருப்ப தென்னோ வுரை. 62

வீட்டிலே சென்று வினை[2]யொழிந்து நின்றிடிலேன்
நாட்டிலே நல்வினைகள் [3]செய்திடிலேன் - கூட்டில்வாட்
சாத்தியே நின்றிலையேற் றக்கனுர் வேள்விசெய்த
மாத்திரமே யாங்கண்டாய் வந்து. 63

சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்
சிவனுடைய தென்னறிவ தென்றுஞ் - சிவனவன
தென்செயல தாகின்ற தென்று மிவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான். 64

---

[1]செய்வானொருவனுமாம், [2]ஒழித்து நின்றாலும். [3]செய் தாலும். பா. 62-இல் யாவேனும் என்றிருத்தல் வேண்டும்.

இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுட
ஞென்றுசொலி மன்றத்து நின்றவரா - ரின்றிங்கே
யங்க முயிர்பெறவே பாடு மடியவரா
ரெங்குமிலை கண்டா யிது. 65

விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்
தெரிந்துந் தெரியாதும் நிற்பர் - தெரிந்துந்
தெரியாது நிற்கின்ற சேயிழைபா லென்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று. 66

ஆதனமு மாதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச் - சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராயிருப்ப
ரேதமறக் கண்டவர்க ளின்று. 67

தாமடங்க விந்தத் தலமடங்குந் தாபதர்கள்
தாமுணரி லிந்தத் தலமுணருந் - தாமுனியிற்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலும்
நாமடந்தை நில்லாள் நயந்து. 68

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் - றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும்
[1]ஆக்கியிடும் அன்பர்க் கவன். 69

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்த - லேடெதிர்வேப்
பென்புக் குயிர்கொடுத்த லிங்கிவைதா மோங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல். 70

---

[1] ஆக்கிடுவன்.

கோல்கரியி னீற்றறையி னஞ்சிற் கோலைதவிர்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீந்தல்- நல்ல
மருவார் மறைக்காட்டின் வாசல்திறப் பித்தல்
[1]திருவாமு ராளி செயல். 71

மோக மறுத்திடின்நாம் முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் - தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்றொண்டன் [2]றொண்டுகளே
யேதாகச் சொல்லுவேன் யான். 72

[3]பாய்பரியே றநதப் பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தே. 73

அம்மையிலு மிம்மையிலு மச்சந் தவிர்த்தடியா
ரெம்மையுமா யெங்கு மியங்குதலான் - மெய்ம்மைச்
சிவயோக மேயோக மல்லாத யோக
மவயோக மென்றே அறி. 74

மன்னனரு ளெவ்வண்ண மானுடர்பான் மாணவக
அன்ன வகையே அரனருளும் - என்னி
லடியவர்ரே யெல்லாரு மாங்கவர்தா மொப்பி
லடியவரே யெல்லா மறி. 75

---

[1]திருவாகீ சன்றன் செயல். [2]தொண்டதனை. [3]பாய்பரி யோன்தந்த......பயனை.

உடம்புடைய யோகிகள்தா முற்றசிற் றின்ப
மடங்கத்தம் [1]பேரின்பத் தாக்கத் - தோடங்கி
முளைப்பதுமோன் றில்லை முடிவதுமோன் றில்லை
யிளைப்பதுமோன் றில்லை யிவர். 76

பேரின்ப மான பிரமக் கிழத்தியுட
னேரின்பத் துள்ளானை யுள்ளபடி - பேரின்பங்
கண்டவரே கண்டார் கடலுயிர்த்த வின்னமுத
முண்டவரே யுண்டார் சுவை. 77

நங்கையினு ளுமனைத்துஞ் செய்தாற்போ னுடனைத்து
நங்கையினுற் செய்தளிக்கு நாயகனும்- நங்கையினு
நம்பியாய்த் தானடுவே நாட்டப் பேறுமிதுகா
ணெம்பெருமா னுர்த மியல்பு. 78

பொன்னிறங் கட்டியினும் பூணினும் நின்ருற்போ
லங்நிற மண்ணலு மம்பிகையுஞ் - செங்நிறத்த
ளேங்நிறத்த ளாயிருப்ப ளேங்கள் சிவபதியு
மங்நிறத்த னுயிருப்ப னுங்கு. 79

தாரத்தோ டொன்ருவர் தாரத்தோர் கூருவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர் - தாரத்தி
னுதாந்தத் தேயிருப்பர் [2]நாற்ருனத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு. 80

ஒன்றுரைத்த தோன்றுரையாச் சாத்திரங்க ளோன்ருக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவா - லின்றுரைக்க
வேன்னு லியன்றிடுமோ வேன்போல்வா ரேதேனுஞ்
சொன்னுற்ரு னேறுமோ சோல்.  81

---

[1]பேரின்பத்தாக்கிற். [2]நாற்ருனத்தே யிருப்பர்.

யாதேனுங் காரணத்தா லெவ்வுலகி லெத்திறமு
மாதேயும் பாக னிலச்சினையே - யாதலினுற்
பேதமே செய்வா யபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின். 82

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுணின் ருடன் மகிழ்ந்தானுஞ் - சென்றுடனே
யெண்ணுறுமைம் பூதமுத லேட்டுருவாய் நின்றுனும்
பேண்ணுறநின் ருடும் பிரான். 83

சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச் - சிவமேன்
றுணர்வாரு மங்கே யுணர்வழியச் சேன்று
புணர்வாரு முண்டோ புவி. 84

அதுவிது வேன்று மவனுனே யேன்று
மதுநீயே யாகின்று யேன்று - மதுவானே
னேன்றுந் தமையுணர்ந்தா ரேல்லா மிரண்டாக
வோன்றுகச் சோல்லுவரோ வுற்று. 85

† ஈருகி யங்கே முதலோன்ரு யீங்கிரண்டாய்
மாருத வேண்வகையாய் மற்றிவற்றின் - வேரு
யுடனு யிருக்கு முருவுடைமை யேன்றுங்
கடனு யிருக்கின்றுன் காண். 86

---

† திருஞான. தேவாரம். திருவீழிமிழலை. பண் - நட்ட பாடை. 2.

உன்னுதாத் தேகிடந்த கீட முறுவதெல்லா
[1]முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ - மன்னுயிர்க
ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்
செவ்வகையே நின்றசிவன் பால். 87

அவனே யவனி [2]முதலாயி னுனு
மவனே [3]யறிவாய்நின் ருனு - மவனேகா
ணுகிப் பெண்ணு யலியாகி நின்ருனுங்
காணுமை நின்ருனுங் கண்டு. 88

இன்றுதா னீயென்னைக் கண்டிருந்துங் கண்டாயோ
அன்றித்தா னுன்னைக் கண்டேனே - வென்ரு
லருமாயை யீன்றவள்தன் பங்கனையார் காண்பார்
பெருமாயைச் சூழல் பிழைத்து. 89

கடலலைத்தே யாடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க வாராதாற் போலப் - படியி
லருத்திசெய்த வன்பரைவந் தாண்டதுவு மெல்லாங்
கருத்துக்குச் சேயனுய்க் காண். 90

*சிவனெனவே தேறினன்யா னென்றமையா லின்றுஞ்
சிவனவனி வந்தபடி செப்பி-லவனிதனி
லுப்பெனவே கூர்மை யுருச்செய்யக் கண்டமையா
லப்படியே கண்டா யவன். 91

---

[1]உன்னுடைய தென்னு. [2]முதலாகி நின்ருனும். [3]அறிவா யினுனும்.

*திருவாசகம். திருவண்டப்பகுதி. அடி 62.

அவனிவனுய் நின்ற தவனருளா லல்ல
தேவனவனுய் நிற்கின்ற தேழா - யவனிதனிற்
ரேன்றுமரப் புல்லூரி தோல்லுலகி லம்மரமா
யின்றிடுமோ சோல்லா யிது. 92

முத்தி முதற்கோடிக்கே மோகக் கோடிபடர்ந்
தத்தி பழுத்த தருளேன்னுங் - கத்தியினுன்
மோகக் கோடியறுக்க முத்திப் பழம்பழுக்கு
மேகக் கோடியேழுங்கா ணின்று. 93

அகளத்தி லானந்தத் தானந்தி யாயே
சகளத்திற் றையலுடன் [1]ரேன்றி - நிகளத்தைப்
போக்குவதுஞ் சேய்தான்றன் போன்னடியேன் [2]புன்றலேமே
லாக்குவதுஞ் சேய்தா னவன். 94

[3]குற்றமறுத் தேன்னேயாட் கோண்டருளித் தோண்டனே
றுற்ற தியானத் துடனுறைவார் - முற்றவரின்
மாட்சியுமாய் நிற்பார்யான் மற்ரேன்றைக் கண்டிடினக்
காட்சியுமாய் நிற்பார் கலந்து. 95

ஆளுடையா னேந்தரமு மாளுடையா னேயறியுந்
தாளுடையான் ரேண்டர் தலேக்காவ - ளுளுந்
திருவிசலூ ராளுஞ் சிவயோகி யின்றேன்
வருவிசையை மாற்றினுன் வந்து. 96

தூலத் தடுத்த பளிங்கின் றுளக்கமேனத்
தூலத்தே நின்று துளங்காமற் - காலத்தாற்
ருளேத்தந் தேன்பிறவித் தாளே யறவிழித்தார்க்
காளன்றி யேன்மா றதற்கு. 97

[1]தங்கி. [2]புன்தலேயில். [3]இதில் ஒருமை வினேயான பாடங்கள் உள, உரையை நோக்கின் அவை போருந்தா.

இக்கணமே முத்தியினை யெய்திடினும் யானினைந்த
அக்கணமே யானந்தந் தந்திடினு - நற்கணத்தார்
நாயகற்கும் நாயகிக்கும் நானடிமை யெப்பொழுது
மாயிருத்த லன்றியிலேன் யான். ௯௮

என்னை யுடையவன்வந் தென்னுடனு யென்னளவி
லென்னையுந்தன் னுளாகக் கொள்ளுதலா - லென்னை
யறியப்பெற் றேனறிந்த வன்பருக்கே யாளாய்ச்
சேறியப்பெற் றேன்குழுவிற் சென்று. ௯௯

சிந்தையிலு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை
வந்தவனை மண்ணிடை [1]நான் வாராமற் - றந்தவனை
மாதினுட னேத்திறமும் வாழ்ந்திருக்க வேன்பதலா
லேதுசோலி வாழ்த்துவே னின்று. 100

ஆதார மாகி அருளோடு நிற்கின்ற
சூதான இன்பச் சுகவடிவை—ஓதாமல்
உள்ளவர்கள் கூடி உணர்வோழிய நிற்பதலால்
தேள்ளவா ராதே சிவம்.

போருளும் மனையும் அறமறந்து போக மறந்து புலன்மறந்து
கருவி கரண மவைமறந்து கால மறந்து கலைமறந்து
தரும மறந்து தவமறந்து தம்மை மறந்து தற்பரத்தோடு
உருகி உருகி ஒருநீர்மை யாயே விட்டார் உய்யவந்தார்.

---

[1] நாம். நான் என்று முன் இருத்தலால் ஈற்றில் யான் என்ற பாடம் போருந்தாது.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# சிவஞானபோதச் சிறப்புப்பாயிரம்

---

## நேரிசை யாசிரியப்பா

மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பேரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருள்தீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னுன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
போய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

---

" நூல் செய்தான் பாயிரஞ் செயற்பாலனல்லன்...இந்தப் பாயிரஞ்செய்தார் யாவரேனில், இதன் வழி சிவஞான சித்தி என்னும் நூலைச் செய்தாரும் அவர் மாணுக்கராகிய நாற்பத் தோன்பது பெயரிற் சண்பைத் தலைவன் நாயனுருமாகிய அருணந்தி தேவதம்பிரான் " என்பது பாண்டிப் பெருமாள் விருத்தியுரை.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

மெய்கண்டதேவ நாயனுர்

அருளிச்செய்த

# 3. சிவஞான போதம்

---

## மங்கல வாழ்த்து

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார் – தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

# 1. போதுவியல்பு

## 1. பிரமாணவியல்

### முதற்சூத்திரம்

அவனவ ளதுவேனு மவைமு வினைமையிற்
ேறாற்றிய திதியே யோடுங்கிமலத் துளதா
மந்த மாதி யேன்மனுர் புலவர்.

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் போழிப்பு

கருத்துரை :—என்னுதலிற்றேவேனின், சங்கார காரணனு யுள்ள முதலையே முதலாக வுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துத னுதலிற்று.

உரை வகை:—இதன் போழிப்பு [1]உரைத்துக் கோள்க.

### முதலதிகரணம்

மேற்கோள்:—ஈண்டு, உளதாய் ஒருவனேருத்தியோன் றேன்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாச முடைத் தேன்றது.

ஏது:—தோற்றமு மீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

---

[1] விரித்துரைத்து.

உதாரணம்:—

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ
வோன்றுேன்றிற் றேன்றி யுளதா யிறக்கண்டு
மன்றேன்று முண்டேன்ன வாய்ந்து.

இரண்டாமதிகரணம்

மேற்கோள்:—இனி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை யென்றது.

ஏது:—இல்லதற்குத் தோற்ற மின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்.

உதாரணம்:—

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்த
தத்திதியி லேன்னி னழியா தவையழிவு
தத்திதியு மாதியுமா மங்கு.

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்று ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனு மம்புழுப்போல் [1]வேண்டுருவந் தான்
[2]கூட்டானே மண்போற் குளிர்ந்து. [கோடுத்துக்

நோக்காது நோக்கி நோடித்தன்றே காலத்திற்
ருக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னுக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
[3]கண்டவனி னிற்றின்றுங் கட்டு.

---

[1]வேண்டுருவைத். [2]கூட்டானே, கூட்டரனே. [3]கண்ட வணில்.

## மூன்றுமதிகரணம்

மேற்கோள்:—இனி, சங்காரமே முதலென்றது.

ஏது:—சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

உதாரணம்:—

ஒன்றலா வொன்று லுளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தோழும்பாகு மங்கு.

# இரண்டாஞ் சூத்திரம்

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை:—என்னுதலிற்றோ வெனின், புனருற்பவம் வருமா றுணர்த்துத லுதலிற்று.

## முதலதிகரணம்

மேற்கோள்:—ஈண்டு, இவ் வான்மாக்கள் பலவும் முதல்வன் றானேயாய் நிற்கு மென்றது.

ஏது:—அத்துவிதமேன்ற சொல்லானே ஏகமேன்னில், ஏக மேன்று சுட்டுவதுண்மையின் அத்துவித மேன்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு.

உதாரணம்:—

கட்டு முறுப்புங் கரணமுங் கோண்டுள்ள
மிட்டதோரு பேரழைக்க [1]வேன்னேன்றுங்—கோட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா [2]யல்லனுமா மங்கு.

ஒன்றேன்ற தோன்றேகா ணேன்றே பதிபசுவா
மோன்றேன்ற நீபாசத் தோடுளே கா—[3]ணேன்றின்று
லக்கரங்க ளின்று மகர வுயிரின்றே
லிக்கிரமத்தேன்னு மிருக்கு.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மேண்ணுஞ் சுவையும்போ லேங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளோன்றேன்னு
தத்துவித மேன்றறையு [4]மாங்கு.

அரக்கோடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகேன்ப னின்று.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள்:—இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனுணையின் வருமேன்றது.

---

[1]ஏனேன்றுங்(கு), [2]யல்லனும், யல்லனுமாய், [3] ஒன்றின் றேல். ஒன்றின்றுள், [4]அங்கு.

ஏது:—ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்.

உதாரணம்:—

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ் சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா [1]மறிந்தணைப்பா ராங்கு.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் [2]செய்கமலத் தாம்.

மூன்றுமதிகரணம்

மேற்கோள்:—இனி, இவ்வான்மாக்கள் மாறிப்பிறந்து வருமென்றது.

ஏது:—தோற்றமு மீறும் உள்ளதற் கல்லது உளதாதல் இன்மையான்.

உதாரணம்:—

கண்ட நனவைக் கனவுணர்விற் றுன்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினுற்—கண்செவிகேட்

[1] அறிந்தணைப்பர். [2] செய்கை மலர்த்தாம்

டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

அரவுதன் றேலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

நான்காமதிகரணம்

மேற்கோள்:—இனி, நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.

ஏது:—அவன் ஏகாநேக மிரண்டு மின்றிச் சருவவியாபியாய் நிற்றலான்.

உதாரணம்:—

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டேன்னி
லெங்கு முளனன் றேவற்றேவனு—மங்க
ணவையவனன் றில்லைப் பொன்னேளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு.

## மூன்றாஞ் சூத்திரம்

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
னுண்டிவினை யின்மையி லுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை:—என்னுதலிற்றோ வெனின், ஆன்மப் பிரகாசம் உணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—ஈண்டு ‡இலதென்றலின் ஆன்மா வுளதென்றது.

பொழிப்புரை:—எவற்றினையும் அன்றன்று எனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின் அதுவே அவ் வான்மாவா மென்றது.

உதாரணம்:—

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்சுழுத்தாய்
நின்றோன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தற்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

---

‡"ஈண்டு மேற்கோளொன்றாயினும் எழுவகை மதங்களை வேறுவேறு மறுக்கும் ஏதுக்க ளேழாகலான், ஆன்மா வுள தென்னு மேற்கோள் அவற்றோடு தனித்தனி கூட்டியுரைக்கப் பட்டு ஏழ்அதி கரணமாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இச் சூத்திரத்திற் கூறிய ஏதுவே ஏது; மேற்கோளு மதுவே யாகலின், ஏனைச் சூத்திரங்களுட் போல வேறே ஏதுக்கூற வேண்டாமையின், இவை ஏதுவாமாறும் இவற்றான் மேற் கோளைச் சாதிக்குமாறும் விளங்க வுணர்த்தி வலியுறுத்துதல் மாத்திரையே இவ்வதிகரணங்களுட் கூறப்படுவதென்க" என்பது சிவஞானமாபாடியம்.

## இரண்டாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:— இனி எனதுடலென்றலின் ஆன்மாவுள தென்றது.

பொழிப்புரை:— என்பதி என்மனே யென்ருற் போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ் வான்மாவா மென்றது.

உதாரணம்.—

எனதென்ற மாட்டி னெனதலா தென்னு
துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேரு முணர்.

## மூன்ருமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:— இனி ஐம்புலனறிதலின் ஆன் மாவுள தென்றது.

பொழிப்புரை:–ஐம்புலனுகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ் வைந்தினுலும் ஐம்பயனு மறிவதுளதாகலின் அதுவே அவ் வான்மாவா மென்றது.

உதாரணம் :—

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனுய வஞ்சேழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லே யோர்.

## நான்காமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மா வுள தென்றது.

பொழிப்புரை:—கனவின்கட் கனவு கண்டாமென்றுங் கண்டில மென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ் வான்மாவா மென்றது.

உதாரணம்:—

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் [1]சென்றடங்கி—யவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுடல் நீயல்லை மற்று.

## ஐந்தாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—இனிக் கண்படில் உண்டிவினை யின்மையின் ஆன்மாவுள தென்றது.

பொழிப்புரை:—ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிராகிருதிக் கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத் துன்பஞ் சீவியா நிற்பதுள தாகலின் அதுவே அவ்வான் மவா மென்றது.

உதாரணம்:—

கண்டறியு மிவ்வுடலே காட்டோடுங்கக் காணுதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யோடுங்கா [2]துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்.

---

[1]சென்றொடுங்கி, [2]துடன்மன்னி.

## ஆறுமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—இனி, உணர்த்தவுணர்தலின் ஆன்மா வுளதென்றது.

பொழிப்புரை:—அவன் அறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உதாரணம்:—

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி—யறிந்த
தேதுவறிவு மன்ருகு மெய்கண்டா ஞென்றி
னதுவதுதா னென்னு மகம்.

## ஏழாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—இனி, மாயா வியந்திர தநுவினுள் ஆன்மாவுள தென்றது.

வேறும் ஓர் ஏது:—அவைதாம் வெவ்வேறு பெயர்பற்று நிற்றலான்.

உதாரணம்:—

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே [1]போல—வலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லது[2]தநுவாந்
தானத்தின் வேருகுந் தான்.

---

[1]போலும், [2]தனுவாய்.

இனையபல பிறவிகளி னிறந்துபிறந் தருளா
லிருவினைகள் புரிந்தருந்து மிதுசகலம் அகலா
முனமருவு மிருபயனு மோருகாலத் தருந்த
முந்துநுக ருந்துபய னந்தமுற வந்த
வினையுமெதிர் வினையுமுடி வினையுதவு பயனு
னோராக நேராதன் மேவுங் காண்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே. 48

நாடியசத் திநிபாத நாலு பாத
நண்ணும்வகை யெண்ணரிய ஞான பாதங்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தனொரு மூர்த்திகொடு குறுகி மோக
நீடியகே வலசகல நிகழா வாறு
நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்தங்
கேடில்புகழ் தருஞ்சரியை கிரியா யோகக்
கேண்மையரே லிவையுணர்த்தக் கிளக்கு நூலே. 49

முத்தி பேதங்களதியல்பு

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்து
மறுமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி
விரவுவினை கேடுமுத்தி மலம்போ முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கேடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே. 50

---

# உண்மை யியல்பு

---

## இவ் வியலின் வகை

இங்கிவை போதுவி யம்பு மேன்பர்க ளிதன்மேல் [1]ஆன்மாத்
தங்கிய [2]அஞ்ச வத்தை [3]தன்னுண்மை [4]உணர்த்துந் தன்மை
போங்கோளி [5]ஞான வாய்மை [6]அதன்பயன் [7]புனித ருமை
மங்கதில் [8]அணைந்தோர் தன்மை யறைகுவ னருளி னூலே.

## மூன்றுஞ் சூத்திரம்

### 1. ஆன்மா

சேறிந்திடு முடலுண் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
யறிந்ததி லழுந்து மோன்று மறிந்திடா தறியுந் தன்மை
பிறிந்தடை வஞ்ச வத்தை பேருகிய மலத்தாற் பேணி
யுறுந்தனி யதீத முண்மை யுயிர்க்கேன வுணர்த்து மன்றே.

உருவுணர் விலாமை யானு மோரோரு புலன்க ளாக
மருவிநின் றறித லானு மனுதிக டம்மின் மன்னித்
தருபய னுகர்த லானு முயிர்சட மாதலானு
மருவினை யுடலு ளாவி யறிவினு லறியு மன்றே.

அறிவேனில் வாயில் வேண்டா வன்றேனி லவைதாமேன்னே
யறிவவை யுதவு மேன்னி லசேதன மவைதா மேல்லா
மறிபவ னறியுந் தன்மை யருளுவ னேன்னி லான்மா
வறிவில தாகு மீச னசேதனத் தளித்தி டானே. 54

அறிவினு லறிந்த யாவு மசத்தாத லறிதி யேன்று
மறிவினு லறியோ ணுதே லாவதோன் றின்மை தோன்மை
யறிவுதா னேன்றை முந்தி யதுவது வாகக் காணு
மறிவுகா ணசத்து மற்ற தறிவினுக் கறியோ ணுதே. 55

எவ்வறி வசத்த றிந்த தேனிலுயி ரறியா தீச
னவ்வறி வறியா னல்ல தசேதன மறியா தாவி
சேவ்விய கருவி †கூடிற் றேரிவுரு தருளிற் சேரா
*துவ்விரு வகைய தேன்னி லோளியிரு ளோருங்கு ருவே.

சத்திது வேன்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா வசத்திது சத்தி தேன்றோர்
சத்திரு ளோளிய லாக்கண் டன்மைய தாம சத்தைச்
சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே. 57

கண்ணேளி விளக்க ளித்துக் காட்டிடு மேன்னின் முன்னங்
கண்ணேளி யோன்று மின்றும் விளக்கோளி கலந்தவற்றைக்
கண்ணேளி யகல நின்றே கண்டிடும் வேறு காணக்
கண்ணேளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தோன்
றன்றே 58

† கூடித்தேரி. * ஒவ்விரு.

[1]ஓரிடத் திருத்தன் மாயா வுருநிறைந் திடுத லொன்றும்
பேரிடத் துறைத ருனே பிறங்கறி வாகி நிற்றல்
சோர்வுடைச் சடநி கழ்த்த லெனுமிவை சொல்லார் நல்லோ
[2]ரோரிடத் துணரு முண்மை யொளிர்தரு முபலம் போலும்.

## நான்காஞ் சூத்திரம்

### 2. அஞ்சவத்தை

எண்ணவொன் றிலாத தீத மெய்திய துரியத் தொன்று
நண்ணிடுஞ் சுழுத்தி தன்னி னயந்துள தொன்று பின்னு
மண்ணிடுங் [3]கனவு தன்னி லாறேழாஞ் சாக்கி ரத்திற்
கண்ணுறு மஞ்சா ருய கருவிகள் [4]மருவுந் தானே. 60

இவ்வகை யவத்தை தன்னி லெய்திடுங் கரண மெல்லா
மெய்வகை யிடத்தி லுற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம கற்றப் புரிந்திடி லருளா லாங்கே
யைவகை யவத்தை யுய்க்கு மறிவினு லறிந்து கொள்ளே.

நீக்கமி லதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகு
மூக்கமி லிரண்டுங் கூடா தொழியவோர் நிலையி னீடுஞ்
[5]சாக்கி ராதீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே. 62

---

[1] பண்புத்தொகை. [2] வினைத்தொகை. [3] கனவிலாறே ழொன்பதாஞ். [4] காணும். [5] சாக்கிரவதீதம்.

ஐந்தாஞ் சூத்திரம்

### 3. தன்னுண்மை

மருவிய போறியி லோன்று மாபூத மைந்தி லோன்றுங்
கருவிக ளுன்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடி
யோருபுல னுகரு மிந்த வோழுங்கோழிந் துயிரு மோன்றைத்
தேரிவுரு தவனே ழிந்தத் திரள்களுஞ் சேயலி லாவே. 63

தனக்கேன வறிவி லாதான் ருனிவை யறிந்து சாரான்
†றனக்கேன வறிவி லாத வாயிரு னறிபா சாரத்
தனக்கேன வறிவி லாதான் றத்துவ வன்ன ருபன்
றனக்கேன வறிவா னுலிச் சகலமு நுகருந் தானே. 64

### 4. உணர்த்துந் தன்மை

‡கண்டுணர் புலன்கள் காணுங் கருத்திலு லோருத்தன் ஞானங்
கோண்டுள மறியு மேன்னிற் கோள்பவன் முதலி யாகு
மண்டிய வுணர்வு யிர்க்கா மன்னிநின் றறியு மேன்னி
லுண்டிட வேண்டு வானுக் கோருவன்வே றுண்ட லாமே.

இருணனி யிரவி தான்வந் திரித்தலு மிரவி லேண்ணும்
போருணிலே கண்டு மாந்தர் போருந்திடு மாறு போல
மருணிலே யேங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னு
மருளையு மோழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே. 66

† தனக்கறிவிலாத வாயில்தான் அறியாது சாரா
‡ கண்டறி 3. 4. பிரிவு சிந்தனையுரைப்படியாம்.

அறிந்திடு மனுதி வாயி லானவை யவன்ற னூலே
யறிந்திடு மேன்று மோன்று மறிந்திடா வவைபோலி யாவு
மறிந்திடு மறியுந் தன்மை யறிந்திடா கன்மத் தோன்மை
யறிந்தவை நுகரு மாறு மருளுவ னமலன் றுனே. 67

## ஆறுஞ் சூத்திரம்

### 5. ஞான வாய்மை

காட்டிடுங் கரண மோன்று மில்லையேற் காணு ணுதா
[1]னுட்டிய விவற்றுன் ஞான நணுகவு மோண்ணு முன்ன
மீட்டிய தவத்தினுலே யிறையரு ளுருவாய் வந்து
கூட்டிடு மிவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே. 68

## ஏழாஞ் சூத்திரம்

பன்னிறங் கவருந் தோன்மைப் படிகநீ டோளியும் பன்மை
மன்னிலங் கியல்புந் தந்த வளரோளி போல வையந்
தன்னகம் பயிலு நற்சிற் சடங்களின் றன்மை தாவா
நன்னலம் பேறநி றைந்த ஞானமே ஞான மேன்பர் 69

மாயை[2]மா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளேனி லிருளாய் நிற்கு
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளேனி லோளியாய் நிற்கும். 70

---

[1]நாட்டிய. [2] மாயேயம் என்று திருத்தல் வேண்டுமேன் பது போருந்தாமையைச் சிந்தனையுரை முதலியவற்றிற் காண்க.

## எட்டாஞ் சூத்திரம்

### 6. ஞானவாய்மையின் பயன்

தேசுற மருவு மான்ம தேரிசன மான்ம சுத்தி
வாசிலா வான்ம லாப மாகமுன் ருகு மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றருன் பணியை நீத்த
லேசினே யத்த ழுந்த லேனுமிவற் றடங்கு மன்றே. 71

தன்னறி வதனு லேதுந் தனக்கறி வில்லை யேனுந்
தன்னறி வாக வேல்லாந் தனித்தனி பயன ருந்துந்
தன்னறி வறியுந் தன்மை தன்னுலே தனைய றிந்தாற்
றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே. 72

தத்துவ மான வற்றின் றன்மைக ளுணருங் காலை
யுய்த்தறிந் திடவு திப்ப தோளிவளர் ஞான மாகு
மத்தன்மை யறியு மாறு மகன்றிட வதுவா யான்மா
சுத்தமாஞ் சுத்த ஞானத் தோருமுத ரேன்று மன்றே. 73

உறைதரு முணர்வு மன்றி யதன்முத லுள்ள தேன்றிங்
கறைவதே னென்னி லண்ண லருளேனு மதுவே யன்றி
நிறையோளி முதல தன்றி நின்றிடா நிமல னுகு
மிறையவன் முதல வன்ற னிலங்கருள் சத்தி யாமே. 74

சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகுஞ் சிவமோ ழிந்தச்
சத்திதா னின்ரு முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி
யத்தனை யருளு மேங்கு மடைந்திடு மிருள கற்றி
வைத்திடு மிரவி காட்டும் வளரோளி போன்ம கிழ்ந்தே. 75

## ஒன்பதாஞ் சூத்திரம்

பேய்

புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய வலகை யேபோ
லகிலமு முணரு மீச னருளுயிர் மேவ லாலே
சகலமு நிகழ வேண்டுந் தலைவனுந் தொழிலுந் தானே
யிகலற வியற்றல் வேண்டு மென்றது நன்றி யின்றே. 76

இன்றுநோக் குரைநடக்கு மியல்பிலொற் கினைய வாய்ந்து
நின்றதோ ரலகை நேர்ந்தா னிகழ்வதே னதுபோ லுள்ளத்
தோன்றிய வுணர்வு தம்பா லுள்ளது நிகழ்த்து மீசன்
றன்றொழி னடத்து மேனி தனக்கெனக் கொண்டுதானே. 77

இந்நிலை தன்னின் மன்னி யெய்திடுங் கலாதி போதந்
தன்னள வறிந்து நிற்குந் தகவிலா மலங்க ணீத்த
வந்நிலை கரண மாகா வகையதி லறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் றேன்று மன்றே. 78

அடைபவர் சிவமே யாகு மதுவன்றித் தோன்று மென்ற
கடனதே னென்னின் முன்னுங் கண்டிடார் தம்மைப் பின்னுந்
தொடர்வரு மருளி னுலுந் தோன்றுமா காணு ராயி
னுடையவ னடிசேர் ஞான முணர்தலின் றணைத லின்றே. 79

## பத்தாஞ் சூத்திரம்

பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனு லுள்ளச் செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே. 80

ஒடுங்கிடா கரணந் தாமே யொடுங்குமா றுணர்ந்தோ டுக்க
வொடுங்கிடு மென்னி னின்ற தொடுங்கிடா கரண மெல்லா
மொடுங்கிட வொடுங்க வுள்ள வுணர்வுதா னெழியும் வேரு
யொடுங்கிடி னன்றி மற்றவ் வுண்மையை யுணரோ ணுதே.

பற்றிடுங் கருவி யாவும் படர்ந்துணர் வளிக்குங் காலை
யுற்றறிந் திடுவ தோன்றி னுணர்வினி னுண்மை யாகு
மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேற்
பேற்றிடு மதனை மாயப் பிறப்பினை யறுக்க லாமே. 82

முந்திய வொருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்ட
சிந்தனை செய்த லுண்மை தெளிந்திட லதுதா னுக
வந்தவா றெய்த நிட்டை மருவுத லென்று நான்கா
மிந்தவா றடைந்தோர் முத்தி யெய்திய வியல்பி னோரே. 83

பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலு
மீசனை யுணர வொண்ணு திறையருண் ஞான நண்ணின்
தேசுறு மதனுன் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை. 84

விளம்பிய வகையி னிட்டை மேவிட லரிதேன் முன்ன
மளந்துணர் வளித்த வற்றி னளவுமற் றவற்றி னுலே
யுளங்கொளுந் தனையு முள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே. 85

பாவிக்கின் மனுதி வேண்டும் பயனிலை கரண நீத்துப்
பாவிப்ப னென்னி லென்ன பழுதுள பாவ கத்தாற்
பாவிக்க வொண்ணு னென்று பாவிப்ப னென்னி னீயேன்
பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றி னோர்க்கே. 86

ஒன்றிரண் டாகி யோன்றி னேருமையா மிருமை யாகி
யோன்றினேன் றழியு மோன்ரு தேன்னினேன் ருகா தீயி
னேன்றிரும் புறழி னின்ரு முயிரினங் தோழிலும் வேண்டு
மோன்றிநின் றுணரு முண்மைக் குவமையா ணவத்தோ
டோன்றே. 87

அழிந்திடும் பாச மேன்னி னித்தமேன் றுரைத்தல் வேண்டா
வழிந்திடா தேன்னின் ஞான மடைவது கருதல் வேண்டா
வழிந்திடுஞ் சத்தி நித்த மழிந்திடா வோளியின் முன்ன
ரழிந்திடு மிருளு நாச மடைந்திடா மிடைந்தி டாவே. 88

எல்லையில் பிறவி நல்கு மிருவினை யேரிசேர் வித்தி
னேல்லையி னகலு மேன்ற உடற்பழ வினைக ளூட்டுந்
தோல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டே
லல்லோளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே. 89

## 7 புனித ஞமம்

பந்தமா னவைய றுத்தும் பவுதிக முழலு மேல்லைச்
சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரு
மந்தமா திகளில் லாத வஞ்சேழுத் தருளி ஞலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே. 90

திருவேழுத் தைந்தி லான்மாத் திரோதமா சருள்சி வஞ்சூழ்
தரநடு நின்ற தோன்ருந் தன்மையுந் தோன்மை யாகி
வருமந மிகுதி யாலே வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே. 91

ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் ளுக
வோசைகோ ளதனி னம்மே லொழித்தரு ளோங்கு மீள
வாசியை யருளு மாய மற்றது பற்ரு வுற்றங்
கீசனி லேக மாகு மிதுதிரு வெழுத்தி னீடே. 92

## பதினொன்ருஞ் சூத்திரம்

### 8 அணைந்தோர் தன்மை

தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தா
னீங்கிட நீங்கா மூல நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத்த டங்கி யுளத்துளின் போடுங்க நேரே
தூங்குவர் தாங்கி யேகத் தோன்மையிற் றுகளி லோரே. 93

குறிப்பிடங் காலங் திக்கா சனங்கோள்கை குலங்கு ணஞ்சீர்
சிறப்புறு விரதஞ் சீலங் தபஞ்சேபங் தியான மெல்லா
மறுத்தற வொழிதல் செய்தன் மருவிடா மன்னு செய்தி
யுறக்குறு பவர்போல் வாய்மை யொழிந்தவை யொழிந்து
[போமே. 94

அகம்புற மென்றி ரண்டா லருச்சனை புரியு மிந்தச்
சகந்தனி லிரண்டு மின்றித் தமோமய மாகி யெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மையார் போல ஞானந்
திகழ்ந்தகம் புறமே ளுத செம்மையார் நன்மை யாரே. 95

அண்டமே விடவ னைத்து மனைத்தையு மண்ட மேவிக்
கொண்டல்போ லெவையு ஞானங் குறைவிலா நிறைத லாலே
கண்டதோர் பொருளை யந்தக் கருத்திறு காணிற் ருனே.
யண்டநா யகனு மேனி யானதே லைய மின்றே. 96

---

* 92. அகலுமா என்பதுபோல அருளுமா என்பதும், யகரம் ஆன்மா.

மண்முதற் கரண மெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினு லேவையு நோக்கி
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை வுணர்ந்து [போற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே. 97

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

தொண்டர்கள் தாமும் வானோர் தொழுந்திரு மேனி தானு
மண்டருங் கண்டி லாத வண்ணலே யெனவ ணங்கி
வெண்டர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னேரே. 98

### நூற்கருத்து

நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத்
தலைதரு பொருளா யின்பாய்த் தாவில்சற் காரி யத்தாய்
மலைவறு முணர்வாற் பெத்த முத்திகண் மதித்தா மன்றே.

### கேட்போன்

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றல் விளம்பிய வேது நோக்கிப்
பெருகிய வுவமை நான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன்
றருமலை வொழியக் கொள்வோன் றன்வயிற் சாற்ற லாமே.

சிவப்பிரகாசம்

முற்றிற்று

———

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# திருவருட்பயன்

---

## கணபதி வணக்கம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

## 1 பதிமுதுநிலை

அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து. 1

தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான். 2

பேருமைக்கு நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மோப்பின்மை யான். 3

ஆக்கி யேவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல் 4

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன் 5

பல்லா ருயிருணரும் பான்மையேன மேலோருவ
னில்லாதா னேங்க ளிறை. 6

ஆனு வறிவா யகலா னடியவர்க்கு
வானுடர் காணுத மன். 7

எங்கு மேவையு மேரியுறுநீர் போலேகந்
தங்குமவன் ருனே தனி. 8

நலமில னண்ணுர்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன் 9

*உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து. 10

---

* 'மணஞ்சேரி மருந்தினை உன்னுவார் வினையாயின ஓயும்' (அப்பர்)

## 2 உயிரவைநிலை

பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை. 11

திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர். 12

மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்க
டோன்றலர்தொத் துள்ளார் துணை. 13

கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல். 14

பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற. 15

ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய. 16

சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
யுய்த்தசத சத்தா முயிர். 17

இருளி லிருளாகி யெல்லிடத்தி னெல்லாம்
பொருள்க ளிலதோ புவி. 18

ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
யாமன்கண் ‡ காணா அவை. 19

அன்றளவு மாற்றுமுயி ரந்தோ வருடெரிவ
தென்றளவொன் றில்லா விடர். 20

‡ காணாதவை

## 3 இருண்மலநிலை

துன்றும் பவத்துயரு மின்புந் துணைப்பொருளு
மின்றென்ப தெவ்வாறு மில். 21

இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள். 22

ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு
மிருபொருளுங் காட்டா திது. 23

அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
யின்றளவு நின்ற திருள். 24

பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
†கணவர்க்குந் தோன்றாத கற்பு. 25

பன்மொழிக ளென்னுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது. 26

இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றாகப் போம். 27

ஆசாதி யேலணவ காரணமென் முத்திநிலை
பேசாது கவ்வும் பிணி. 28

ஒன்று மிகினு மொளிகவரா தேலுள்ள
மென்று மகலா திருள். 29

விடிவா மளவும் விளக்கனைய மாயை
விடிவாதி கன்மத்து வந்து. 30

---

† கணவற்குந்

## 4 அருளதுநிலை

அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளிற் றலையிலது போல். 31

பெருக்க நுகரவினை பேரொளியா யெங்கு
மருக்கனென நிற்கு மருள். 32

ஊனறியா தென்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான். 33

பாலாழி மீனுளும் பான்மைத் தருளுயிர்கண்
மாலாழி யாழு மறித்து. 34

அணுகு துணையறியா வாற்றேனி லைந்து
முணர்வை யுணரா வுயிர். 35

தரையை யறியாது தாமே திரிவோர்
புரையை யுணரா புவி. 36

மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம். 37

வெள்ளத்து ணாவற்றி யாங்கு விடிந்திருளாங்
கள்ளத் தலைவர் கடன். 38

பரப்பமைந்து கேண்மினிது பாற்கலன்மேற் பூனை
கரப்பருந்த நாடுங் கடன். 39

இற்றை வரையியைந்து மேதும் பழக்கமிலா
வேற்றுயிர்க்கு வீடு மிகை. 40

## 5 அருளுருநிலை

அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாக நீங்காத கோ. 41

அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான். 42

அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளா ரறிவார் புவி. 43

பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமா
மெய்யிரண்டுங் காணார் மிக. 44

பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் ‡காணார் புவி. 45

† எமக்கெ னெவனுக் கெவைதெரியு மவ்வ
தமக்கவனை வேண்டத் தவிர்ம் 46

விடனகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்,
கடனிலிருள் போவதிவன் கண். 47

அகலத் தருமருளை யாக்கும்வினை நீக்குஞ்
சகலர்க்கும் வந்தருளுந் தான். 48

ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின். 49

ஞான மிவனொழிய நண்ணியிடு நற்கலனல்
பானு வொழியப் படின். 50

---

† எவ்வ தெரியும் அவ்வ தவிரும் என்க. ‡காண

## 6 அறியுநெறி

நீடு மிருவினையு நேராக நேராதல்
கூடுமிறை சத்தி கொளல். 51

ஏக னநேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறாதி யில். 52

செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ் சேர்ப்பவனு
முய்வா னுளனென் றுணர். 53

ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூனொடுயிர்
தானுணர்வோ டொன்றுந் தரம். 54

தன்னிறமும் பன்னிறமுந் தானுங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போன் மன்னிறமிப் பூ. 55

கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் ‡நாப்பணிலை
யுண்டில்லை யல்ல தொளி. 56

புன்செயலி னோடும் புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி. 57

ஓராதே யொன்றையுமுற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார். 58

களியே மிகுபுல னுக்கருதி ஞான
வொளியே யொளியா வொளி. 59

கண்டபடி யேகண்டு காணாமை காணாமை
கொண்டபடி யேகொண் டிரு. 60

---

‡ நாப்பணொளி.

## 7 உயிரவை விளக்கம்

‡தூண் நிழல்ஆர் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோற்
றானதுவாய் நிற்குந் தரம். 61

தித்திக்கும் கைக்கும் பால்காணுந் திருந்திடுநாப்
பித்தத்திற் றான்றவிர்ந்த பின். 62

காண்பா னொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வீண்பாவம் †எந்நாள் விடும். 63

ஒளியு மிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவு தெளியாச் செயல். 64

கிடைக்கத் தகுமேற் கேண்மையார்க் கெல்லா
மெடுத்துச் சுமப்பானை யின்று. 65

வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல். 66

தனக்குநிழ லின்றா வொளிகவருந் தம்ப
மெனக்கவர நில்லா திருள். 67

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பி
னிற்கை யருளார் நிலை. 68

ஐம்புலனாற் றான்கண்ட தன்றா லதுவொழிய
வைம்புலனார் தாமா ரதற்கு. 69

தாமே தருமவரைத் தம்வலியி னாற்கருத
லாமே யிவனா ரதற்கு. 70

---

‡ தூண்-தம்பம். (படிகம்) 67, † என்னாய்; விழும்.

## 8 இன்புறுநிலை

இன்புறுவார் துன்பா ரிருளி லெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின். 71

இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டா
மொருவ னுெருத்தி யுறின். 72

இன்பதனை யெய்துவார்க் கீயு ‡மவற்குருவ
மின்பதன மாதலினு லில். 73

தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள். 74

ஒன்றுலு மொன்று திரண்டாலு மொசையெழா
†தென்றுலொன் றன்றிரண்டு மில். 75

உற்றுரும் பெற்றுரு மொவா ருரையொழியப்
பற்றுரு மற்றுர் பவம். 76

பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமினி
நீயொன்றுஞ் செய்யாது நில். 77

ஒண்பொருட்க ணுற்றுர்க் குறுபயனே யல்லாது
கண்படுப்பொர் கைப்பொருள்போற் காண். 78

மூன்றுய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றுத வின்பமதென் சொல். 79

இன்பி லினிதென்ற லின்றுண்டே லின்றுண்டா
மன்பி னிலையே யது. 80

---

‡ அவர்க்கு. † என்றுலு மொரிரண்டுமில்.

## 9 ஐந்தெழுத்தருணிலை

அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகின். 81

இறைசத்தி பாச மெழின்மாயை யாவி
யுறநிற்கு மோங்காரத் துள். 82

ஊன நடன மொருபா லொருபாலா
ஞானநடந் தானடுவே நாடு. 83

விரியமந மேவியவை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும். 84

மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாசி மீளா விடின். 85

ஆராதி யாதார மங்ஙோ வதுமீண்டு
பாராது மேலோதும் பற்று. 86

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி. 87

வாசி யருளியவை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு. 88

ஆசின்நவா நாப்ப ணடையா தருளினல்
வாசியிடை நிற்கை வழக்கு. 89

எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து. 90

## 10 அணைந்தோர் தன்மை

ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்து ளின்போடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். 91

ஐந்தொழிலுங் *காரணர்க ளாந்தொழிலும் போகநுகர்
வேந்தொழிலு மேவார் மிக. 92

எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரோன்
றல்லா தறியா ரற. 93

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலனடக்கு மாமை தக. 94

அவனையகன் றேங்கின்ரு மாங்கவனு மேங்கு
மிவனையொழிந் துண்டாத லில். 95

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கேள்ளுந் திறமேது மில். 96

உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன். 97

ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும். 98

மும்மை தரும்வினைகண் மூளாவா முதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம். 99

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக. 100

* காரணங்கள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

## உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# வினு வெண்பா

—

### நேரிசை வெண்பா

நீடு மொளியு நிறையிருளு மோரிடத்துக்
கூட லரிது கொடுவினையேன்—பாடிதன்மு
னேன்றவார் சோலை யுயர்மருதைச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ 1

இருளி லொளிபுரையு மெய்துங் கலாதி
மருளி னிலையருளு மானும்—கருவியிவை
நீங்கி லிருளா நிறைமருதைச் சம்பந்தா
வீங்குனரு ளாலென் பெற. 2

புல்லறிவு நல்லுணர்வ தாகா பொதுஞான
மல்லதில துள்ளதெனி லங்கியமாங்—தொல்லையிரு
ளூனமலை யாவா றுயர்மருதைச் சம்பந்தா
ஞானமலை யாவாய் நவில். 3

கனவு கனவென்று காண்பரிதாங் காணி
னனவி லவைசிறிது நண்ணு—முனைவனரு
டானவற்றி லொன்று தடமருதைச் சம்பந்தா
யானவத்தை காணுமா றென். 4

அறிவறிந்த தெல்லா மசத்தாகு மாயின்
குறியிறந்த நின்னுணர்விற் கூடா—பொறிபுலன்க
டாமா வறியா தடமருதைச் சம்பந்தா
யாமா ரறிவா ரினி. 5

சிற்றறிவு முற்சிதையிற் சேர்வாரின் ருஞ்சிறிது
மற்றதனி னிற்கிலருண் மன்னுவாங்—துற்றமுகின்
மின்கொண்ட சோலை வியன்மருதைச் சம்பந்தா
வென்கொண்டு காண்பேனி யான். 6

உன்னரிய நின்னுணர்வ தோங்கியக்கா லொண்கருவி
தன்னளவு நண்ணரிது தானுகு—மென்னறிவு
தானறிய வாரா தடமருதைச் சம்பந்தா
யானறிவ தெவ்வா றினி 7

அருவே லுருவன் றுருவே லருவன்
றிருவேறு மொன்றிற் கிசையா—வுருவோரிற்
காணி லுயர்கடந்தைச் சம்பந்தா கண்டவுடற்
பூணுமிறைக் கென்னும் புகல் 8

இருமலத்தார்க் கில்லை யுடல்வினையேன் செய்யு
மொருமலத்தார்க் காரை யுரைப்பேன்—றிரிமலத்தா
ரொன்றுக வுள்ளா ருயர்மருதைச் சம்பந்தா
வன்றுகி லாமா றருள். 9

ஒன்றிரண்டாய் நின்றேன்றி லோர்மையதா மோன்ருக
நின்றிரண்டா மேன்னிலுயிர் நோராகுந்—துன்றிருந்தார்
தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யானுகி
யோங்கியவா றேவ்வா றுரை. 10

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை
காண்பார்க ணன்முத்தி காணர்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநேறி வாரா தவர். 11

ஒன்றி நுகர்வதிவ னூணு முறுதோழிலு
மேன்று மிடையி லிடமில்லே—யோன்றித்
தேரியா வருண்மருதைச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றேவ்வாறு பேசு. 12

அருளா லுணர்வார்க் ககலாத சேம்மைப்
போருளாகி நிற்கும் போருந்தித்—தேருளா
விறுவேண்பா வுண்மை விறுவாரே லூமன்
கறுவின்பா லேய்துவிக்குங் காண். 13

விறுவேண்பா

முற்றிற்று



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

உமாபதி தேவ நாயனர்

அருளிச் செய்த

# போற்றிப்பஃறொடை

---

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்ப - ஞமன்னும்
வேதம்வே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுட
ஞுதநா தாந்த நடுவேதம் - போதத்தா
லாமளவுந் தேட வளவிறந்த வப்பாலைச்
சேம வொளியெவருந் தேறும்வகை - மாமணிசூழ்
மன்று ணிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி - குன்ருத
பல்லுயிர்வெவ் வேறு படைத்து மவைகாத்து
மெல்லை யிளைப்பொழிய விட்டுவைத்துந்-தொல்லையுறும்
அந்தமடி நடுவேன் றெண்ண வளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி - முந்துற்ற
நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடறேன்றத் தோன்றுவரு - மெல்லா
மொருபுடை யொப்பாய்த்தா னுள்ளவா றுண்டா

யருவமா யெவ்வுயிரு மார்த்தே - யுருவுடைய
மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத்
தானடக்குங் காட்டத் தகுதியும்போன் - ஞானத்தின்
கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தா [டிக்
லெண்ணஞ் செயன்மாண்ட வெவ்வுயிர்க்கு - முண்ணு

கட்புலனுற் காணுர்தங் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண் - முற்பாற்
றனுகரண மும்புவன முந்தந் தவற்ருன்
மனமுதலா வந்தவிகா ரத்தால் - வினையிரண்டுங்
காட்டி யதனுற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி - நாட்டுகின்ற
வெப்பிறப்பு முற்சே யிருவினையா னிச்சயித்துப்
பொற்புடைய தந்தைதாய் போகத்துட் - கர்ப்பமாய்ப்
புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கா
லெல்லைப் படாவுதரத் தீண்டியதீப் - பல்வகையா

லங்கே கிடந்த வநாதியுயிர் தம்பசியா
லெங்கேனு மாக வெடுக்குமென - வெங்கும்பிக்
காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்
கேயக்கை கான்முதலா யெவ்வுறுப்பு - மாசறவே
செய்து திருத்திப்பின்பி யோகிருத்தி முன்புக்க
வையவழி யேகோண் டணைகின்ற - பொய்யாத
வல்லவமே போற்றியம் மாயக்கா ருன்மறைப்ப
நல்ல வறிவொழிந்து நன்குதீ - தொல்லையுரு
வக்காலந் தன்னிற் பசியையறி வித்தழுவித்
துக்காவி சோரத்தா யுண்ணடுங்கி - மிக்கோங்குஞ்

சிந்தை யுருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப் - பந்தித்த

பாசப் பெருங்கயிற்றுற் பல்லுயிரும் பாலிக்க
நேசத்தை வைத்த நெறிபோற்றி - யாசற்ற
பானைப் பசும்பதத்தும் பாலனு மப்பதத்து
நாளுக்கு நாட்சகல ஞானத்து - முள்வித்துக்
கொண்டாள வாளக் கருவிகொடுத் தோக்கநின்று
பண்டாரி யான படிபோற்றி - தண்டாத
புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையி
லன்புசேர் கின்றனகட் டைந்தாக்கி - முன்புள்ள

வுண்மை நிலைமை யொருகா லகலாது
திண்மை மலத்தாற் சிறையாக்கிக் - கண்மறைத்து
மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்பக்
கால நியதி யதுகாட்டி - மேலோங்கு
முந்திவியுன் கட்டிலுயிர் சேர்த்துக் கலைவித்தை
யந்த வராக மவைமுன்பு - தந்த
தொழிலறி விச்சை துணையாக மானி
னெழிலுடைய முக்குணமு மெய்தி - மருளோடு
மன்னு மிதயத்திற் சித்தத்தாற் கண்டபொரு
ளின்னபொருளென் றியம்பவொண்ணு - வந்நிலைபோய்க்

கண்டவியன் கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக்
கொண்டுநிய மித்தற்றை நாட்கொடுப்பப் - பண்டை
யிருவினையான் முன்புள்ள வின்பத்துன்,பங்கள்
மருவும்வகை யங்கே மருவி - யுருவுடனின்
றோங்கு நுதலாய வோலக்க மண்டபத்திற்
போங்கருவி யெல்லாம் புகுந்தீண்டி - நீங்காத
முன்னை மலத்திருளுண் மூடா வகையகத்துட்
டுன்னுமிரு ணீக்குஞ் சுடரேபோ - லந்நிலையே
சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரிய
ராக்கிப் பணித்த வறம்போற்றி - வேட்கைமிகு

முண்டிப் பொருட்டா லொருகா லவியாது
மண்டியெரி யும்பெருந்தீ மாற்றுதற்குத் - திண்டிறல்
வல்லார்கள் வல்ல வகையாற் ேறழில்புரித [சேர்
லெல்லா முடனே யொருங்கிசைந்து - செல்காலை
முட்டாமற் செய்வினைக்கும் முற்செய்வினைக் குஞ்
பட்டோலை தீட்டும் படிபோற்றி - நட்டோங்கு [செலவு
மிங்கிலைமை மானுடருக் கேயன்றி யெண்ணிலா
மன்னுயிர்க்கு மிந்த வழக்கேயாய் - முன்னுடைய
நாணாள் வரையி லுடல்பிரித்து நல்வினைக்கண்
40 வாணாளின் மாலா யயனாகி - நீணாகர்

வானுடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
நானா விதத்தா னலம்பெறுநாள் - தான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட - விற்றைக்கு
மில்லையோ பாவி பிறவாமை யென்றெடுத்து
நல்லதோ ரின்சொ னடுவாகச் - சொல்லியிவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு - மையறருஞ்
செக்கி னிடைத்திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
45 தக்கநெருப் புத்தூண் டழுவுவித்து - மிக்கோங்கு

நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து
மீராவுன் னூனைத்தின் னென்றடித்தும் - பேராம
லங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோப மாறுத வேட்கையரா - யிங்கொருநா
ளெண்ணிமுதற் காணாத வின்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு - முன்னடிக்
கண்டு கடன்கழித்தல் காரியமா மென்றெண்ணிக்
கொண்டுவரு நோயின் குறிப்பறிவார் - மண்டெரியிற்

காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணுரிக்க நன்னிதிய
மீய்த்துத்தாய் தந்தைதம ரின்புறுதல் - வாய்த்தநேறி

யோடியதே ரின்கீ ழுயிர்போன கன்றுலே
நீடுபெரும் பாவமின்றே நீங்குமேன - நாடித்தன்
மைந்தனையு மூர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்றூதர் - வேஞ்சினத்தா
லல்ல லுறுத்து மருநரகங் கண்டுநிற்க
வல்ல கருணை மறம்போற்றி - பல்லுயிர்க்கு
மின்ன வகையா லிருவினைக்க ணின்றருத்தி
முன்னைமுத லேன்ன முதலில்லோ - னல்வினைக்க
ணேல்லா வுலகு மேடுப்புண் டேடுப்புண்டு
சேல்காலம் பின்னரகஞ் சேராமே - நல்லநேறி

யேய்துவதோர் காலந்தன் னன்பரைக்கண் டின்புறுத
லுய்யு நேறிசிறிதே யுண்டாக்கிப் - பையவே
மட்டாய் மலராய் வருநாளின் முன்னைநாண்
மோட்டா யுருவா முறைபோலக் - கிட்டியதோர்
நல்ல பிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை
யேல்லை யிரண்டு மிடையோப்பிற் - பல்பிறவி
யத்தமதி லன்றே வளவேன்று பார்த்திருந்து
சத்தி பதிக்குந் தரம்போற்றி - முத்திதரு
நன்னேறிவிஞ் ஞானகலர் நாடுமல மோன்றினையு
மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப் - பின்னன்பு

மேவா விளங்கும் ப்ரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கோள்கை - யன்ன
காதிகுண மாதலினு லாடுந் திருத்தோழிலுஞ் [வனுக்

சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் - பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியு மதிக்கோழுந்து - மச்சமற
வாடு மரவு மழகார் திருநுதன்மே
னீடுருவ வன்னி நெடுங்கண்ணுங் - கேடிலயங்

கூட்டுந் தமருகமுங் கோல வேரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும் - வீட்டின்ப
வேள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியா
ருள்ளத் தினும்பிரியா வோண்சிலம்புங் - கள்ளவினை
வேன்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலு
மோன்றுமுருத் தோன்றும லுள்ளடக்கி - யேன்று
மிறவாத வின்பத் தேமையிருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து - நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனேன்று
பேரிலா நாதனொரு பேர்புனைந்து - பாரோர்த

முண்டி யுறக்கம் பயமின்ப மோத்தோழுகிக்
கோண்டு மகிழ்ந்த குணம்போற்றி - மிண்டாய
வாறு சமயப் போருளுமறி வித்தவற்றிற்
பேறின்மை யேங்களுக்கே பேருக்கித் - தேருத
சித்தந் தேளியத் திருமேனி கோண்டுவரு
மத்தகைமை தானே யமையாமல் - வித்தகமாஞ்
சைவ நேறியிற் சமய முதலாக
வேய்து மபிடேக மேய்துவித்துச் - சேய்யதிருக்
கண்ணருளா னோக்கிக் கடியபிறப் பாற்பட்ட
புண்ணு மிருவினையும் போயகல - வண்ணமலர்க்

கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நேஞ்சுருக்கி
மேய்த்தகைமை யேல்லாம் விரித்தோதி -
[யோத்தோழுகுஞ்

சேணு றிருள்வடிவுஞ் செங்கதிரோன் பானிற்பக்
காணு தொழியுங் கணக்கேபோ - லாணவத்தி
ளுதி குறையாம லென்பா லணுகாம
னீதி நிறுத்து நிலைபோற்றி - மேதக்கோர் 12
செய்யுஞ் சரியை திகழ்கிரியா யோகத்தா
லெய்துஞ்சீர் முத்திபத மெய்துவித்து - மெய்யன்பாற்
காணத் தகுவார்கள் கண்டாற் றமைப்பின்பு
நாணத் தகுஞான நன்னெறியை - வீணே

யெனக்குத் தரவேண்டி யெல்லாப் பொருட்கு
மனக்கு மலரயன்மால் வானோர் - நினைப்பினுக்குந்
தூரம்போ லேயணிய சுந்தரத்தா ளென்றலைமே
லாரும் படிதந் தருள்செய்த - பேராளன்
றந்தபொரு ளேதென்னிற் ருன்வேறு நான்வேருய்
வந்து புணரா வழக்காக்கி - முந்தியென்ற
னுள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றி நிற்குங்
கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி - வள்ளன்மையாற் 13
றன்னைத் தெரிவித்துத் தன்ருளி னுட்கிடந்த
வென்னைத் தெரிவித்த வெல்லையின்கண் - மின்ருரும்

வண்ண முருவ மருவுங் குணமயக்க
மெண்ணங் கலைகால மெப்பொருளு - முன்னமெனக்
கில்லாமை காட்டிப்பின் பெய்தியவா காட்டியினிச்
செல்லாமை காட்டுஞ் செயல்போற்றி - யெல்லாம் 14
தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி [பொய்த்
யெம்மைப் புறங்கூறி யின்புற்றுச் - செம்மை
யவிகாரம் பேசு மகம்பிரமக் காரர்
வெளியா மிருளில் விடாதே - யொளியாய்நீ
நின்ற நிலையே நிகழ்த்தி யொருபொருள்வே
றின்றியமை யாமை யெடுத்தோதி - யொன்ருகச்

சாதித்துத் தம்மைச் சிவமாக்கி யிப்பிறவிப்
பேதந் தனிலின்பப் பேதமுருப் - பாதகரோ
டேகமாய்ப் போகாம லெவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம் பொற்ருளி னுட்புணர்த்தி - யாதியுட
னிற்க வழியா நிலையிதுவே யென்றருளி
யோக்க வியாபகந்தன் னுட்காட்டி - மிக்கோங்கு
மாநந்த மாக்கடலி லாரா வமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினு - லூனுயிர்தான்
முன்கண்ட காலத்து நீங்காத முன்னேனை
யென்கோண்டு போற்றிசைப்பேன் யான்.

---

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்
போற்றியவன் மேய்ஞ்ஞானப் புண்ணியநூல் - போற்றியேங்
வேம்பந்த வாழ்க்கைவிட வேருய்வந் துண்ணின்ற [கள்
சம்பந்த மாமுனிபோற் ருள்.

போற்றிப் பஃருெடை

முற்றிற்று.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# உண்மை நெறி விளக்கம்

---

மண்முதற் சிவம தீரும் வடிவுகாண் பதுவே ரூப
மண்முதற் சிவம தீரும் மலஞ்சட மென்றல் காட்சி
மண்முதற் சிவம தீரும் வகையதிற் ருனி லாது
கண்ணுத லருளால் நீங்கல் சுத்தியாய்க் கருத லாமே. 1

பாயிரு ணீங்கி ஞானந் தனைக்காண்ட லான்ம ரூப
நீயுநின் செயலொன் றின்றி நிற்றலே தரிச னந்தான்
போயிவன் றன்மை கெட்டுப் பொருளிற்போ யங்குத் தோன்ரு
தாயிடி லான்ம சுத்தி யருணூலின் விதித்த வாறே. 2

எவ்வடி வுகளுந் தானு யெழிற்பரை வடிவ தாகிக்
கௌவிய மலத்தான் மாவைக் கருதியே யொடுக்கி யாக்கிப்
பௌவம்விண் டகலப் பண்ணிப் பாரிப்பா னுருவ னென்று
செவ்வையே யுயிரிற் காண்டல் சிவரூப மாகு மன்றே. 3

பரையுயிரில் யானெனதேன் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமா
முரையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறுேன் [றின்றித்
தரைமுதலிற் போகாது தன்னிலைநில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமாநந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தரிசனமாச் செப்பு நூலே. 4

எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்தங்
கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு மேலா
மொப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெல்லா மதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதுமதுவே நினைப்புமது தானே
தருமுணர்வும் புசிப்புமது தானே யாகு
மெய்ப்பொருளு மசைவில்லை யெனவந்தப் பொருளோ
டிசைவதுவே சிவயோக மெனுமிறைவன் மொழியே. 5

பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றி வரினுஞ்
சாதிநெறி தப்பிடினுந் தவறுகள்வந் திடினுந்
தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கி
ைறுதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து
நானுபோ கங்களையுந் தானுகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானுக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே. 6

---

எண்ணும் அருள்நூல் எளிதின் அறிவாருக்(கு)
உண்மை நெறிவிளக்கம் ஓதினன் - வண்ணமிலாத்
தண்காழித் தத்துவனுர் தாளே புனைந்தருளும்
நண்பாய தத்துவநா தன்.

என்னும் வெண்பாவைக் கொண்டு இந்நூலைத் தத்துவ நாதர்அருளியதென்பர்.

உண்மை நெறி விளக்கம்

முற்றிற்று

———



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

உமாபதி தேவ நாயனுர்

அருளிச் செய்த

# கோடிப்பாட்டு†

ஒளிக்கு மிருளுக்கு மோன்றே யிடமோன்று மேலிடிலோன்
ருேளிக்கு மேனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தேளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிகோடி கட்டினனே. 1

போருளாம் போருளேது போதேது கண்ணே
திருளாம் வேளியே திரவே—தருளாளா
நீபுரவா வையமேலா நீயறியக் கட்டினேன்
கோபுர வாசற் கோடி. 2

வாக்காலு மிக்க மனத்தாலு மேக்காலுந்
தாக்கா துணர்வரிய தன்மையனே—நோக்கிப்
பிறித்தறிவு தம்மிற் பிறியாமை தானே
குறிக்குமரு ணல்கக் கோடி. 3

---

† சிவஞான பாடியம் சூ. 9, அதி. 3

அஞ்செழுத்து [2]மெட்டெழுத்து [3]மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் [6]பெருவெழுத்து—நெஞ்சழுத்திப்
[7]பேசு மெழுத்துடனே [8]பேசா வெழுத்தினையுங்
கூசாமற் காட்டக் கோடி. 4

அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த அறிவை அறிவித்தங்—கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமல் கூறக் கோடி. 5

கோடிப்பாட்டு

முற்றும்.



---

[2]சித்தியார் காப்புரை. தணிகைப். குமாரேசப். 31-33.
[3]ஷை அகத்திய. 150. [6]திருவேறும்பியூர்த் திருத்தாண்டகம் 6
[7]திருவருள். [8]சிவம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

உமாபதி தேவநாயனுர்

அருளிச்செய்த

# நெஞ்சு விடு தூது

---

கலிவேண்பா

## இறைவனியல்பு

பூமேவு முந்திப் புயல்வண்ணன் போற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் - ருமேவிப்
பன்றியு மன்னமுமாய்ப் பாரிடத்தும் வான்பறந்து
மேன்று மறியா வியல்பினு - னன்றியு
மிந்திரனும் வானேரு மேனேரு மேப்புவியு
மந்தர வேற்பு மறிகடலு - மந்திரமும்
வேதமும் வேத முடிவும்விளை விந்துவுட
ஞதமுங் காணு நலத்தினு - ஞேத
வரியா னேளியா னளவிறந்து நின்ற
பேரியான் சிறியான்பேண் பாகன் - றேரியா

வருவா னுருவா னருவுருவு மில்லான்
மரியான் மரிப்பார் மனத்தான் – பரிவான
மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினுன்
பொய்யர்க்குப் பொய்யாய்ப்பொய் யாயினு - னையன்
படநாகம் பூண்ட பரமன் பசுவி
னிடமாய் நிறைந்த விறைவன் - சுடரொளியான்

உயிரியல்பு

என்றுமுள னன்றளவுமி யானு முளனுகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற் - சென்றுசென்று
தோற்றியிடு மண்டஞ் சுவேதசங்கண் மண்ணின்மேற்
சாற்றுமுற் பீசஞ் சராயுசங்கட் - கேற்றபிறப்

பெல்லாம் பிறந்து மிறந்து மிருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன் - கல்லா
வுணர்வின் மிசையோ டுலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு - கணையிற்
கொடிதெனவே சென்று குடிபழுதே செய்து
கடிய கொலைகளவு காமம் - படியின்மிசைத்
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி யிடையு மனந்தனக்கு - நாடியது
போன ‡வழிபோகும் புந்திக்கும் புந்தியுட
னுன திறலா ரகந்தைக்கு - மேனி

யயர வயர வழிய வழியு
முயிரின் றுயர முரையேன் - வயிரமே

‡ வழியோடும்.

## தளையினியல்பு

கொண்டதொரு காமனுக்குங் கோபனுக்கு மோகனுக்கு
மண்டு மதமாச் சரியனுக்குந் - திண்டிறல்சே
ரிந்திரியம் பத்துக்கு மீரைந்து மாத்திரைக்கு
மந்தமிலாப் பூதங்க ளைந்தினுக்குஞ் - சிந்தைகவர்
மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றுமல மூன்றவத்தை
யென்றுநின்று செய்யு மிருவினைக்குந் - தோன்றாத
வாயுவொரு பத்துக்கு மாறாத வல்வினையே
யாய திளைக்கு மருநிதிக்கு - நேயமா

மிச்சை கிரியை யிவைதரித்திங் கெண்ணிலா
வச்சங் கொடுமை யவைபூண்டு - கச்சரவன்
சீரினிலை நில்லாமற் றிண்டாடும் பல்கருவி
வாரியகப் பட்டு மயங்கினேன் - றேருங்கா
லுன்னை யொழிய வுறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை - முன்னந்
‡ தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவரென்று - நிலைத்தமிழின்
றெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாம - லைவர்க்கு

மாவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப் - பூவையவர்தங்
கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்
குண்மை யறிவுணர்ச்சி யோராமற் - றிண்மையினா
னாவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங் - காவினிலை

‡ திருக்குறள் 348

நிற்கும்வகை பாராய் நிலையான நெஞ்சமே
போற்பினுடன் யானே புகலக்கேள் - வேற்பின்மிசை

## இறைவனது நிலை

வந்திருக்க வல்லான் மதியாதார் வல்லரணஞ்
சேந்தழலின் மூழ்கச் சிரித்தபிரா - னந்தமிலா

வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
யாதி யமல னிமலனருட் - போத
வறிவி லறிவை யறியு மவர்கள்
குறியுள் புகுதுங் குணவ - னெறிகோள்
வெளியில் வெளியில் வெளியன் வெளியி
லொளியி லொளியி லொளிய - ேனொளியி
லளியி லளியி லளிய னளியி
லளவி லளவி லளவ - னளவிறந்து
நின்று னனைத்து நிறைந்தா னினைப்பவர்பாற்
சென்றுன் றெரியத் தெரியாதான் - குன்று

விளக்காய் நிறைந்த விரிசுடரான் விண்மேற்
றுளக்காம னின்றபெருஞ் சோதி - யுளக்கண்ணுக்
கல்லாது தோன்று வமல னகிலமெலா
நில்லாம னின்ற நிலையினுன் - சொல்லாரு
மீசன் பெருமை யிருவினையே னுன்றனக்குப்
பேசுந் தகைமையெலாம் பேணிக்கேள் - பாசம்

**தசாங்கம் :—**

### 1. மலை

பலவுங் கடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குகுணக் குன்றே - னிலகவே

## 2. ஆறு

செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
வையம் பரவ மகிழ்ந்தெழுந்தங் - கையங்

களவுபயங் காமங் கொலைகோபங் காதி
யளவில்வினை யெல்லா மழித்திங் - குளமகிழத்
தோம்மெனவே யெங்கு முழங்கிச் சுருதிபயில்
செம்மைதரு மாகமங்கள் சேர்ந்தோடி - மும்மலத்தின்
காடடங்க வேர்பறித்துக் கல்விக் கரைகடந்தங்
கோடுபல பூதத் துணர்வழித்து - நீடுபுகழ்
மெய்வாய்கண் மூக்குச் செவியென்னப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவழித்து - நையுமியல்
வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவு
நீக்கிச் செறிந்து நிறைந்தோடிப் - போக்கரிய

பந்தமெனுஞ் சோலை பறித்துப் பரந்தலைக்கு
மந்தமனம் புத்தியுட னுங்காரஞ் - சிந்தைவிழ
மோதி ‡ யலைக்கு மருணீர்மை முக்குணமுங்
காதி யுரோமமெலாங் கைகலந்து - சீதப்
புளக மரும்பிப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலன்முட்ட மேவிக் - களபதன
மாதர் மயக்க மழித்துவளர் மண்டலத்தின்
சோதியொரு மூன்றினையுஞ் சோதித்து - நீதியினு
லாதார மாறினுஞ்சென் றுறியடல் வாயுக்கண்
மீதான பத்து மிகப்பரந்து - காதிப்

பிறுதிவியப் புத்தேயு வாயுவா காய
வுறுதி நிலமைந்து மோடி - மறுவிலா

‡ யருணீர்மையோங்கி விறன் முக்குணமும்.

நான்முகன்மா லீசன் மகேச னலஞ்சிறந்த
தான்முக மைந்தாஞ் சதாசிவமு - மானதோரு
விந்துநா தங்கடந்து சுத்த வேறுவெளியி
லந்தமிலாப் பாழடங்கத் தேக்கியபின் - முந்திவரு
மவ்வறிவுக் கப்பாலுஞ் சென்றகண்ட முள்ளாக்கிச்
செவ்வறிவே யாகித் திகைப்பொழிந்தங் - கெவ்வறிவுந்
தானுய வீடருளித் தன்னிற் பிரிவில்லா
வூனுகி யெவ்வுயிர்க்கு முட்புகுந்து - † மேனியிலா

வஞ்சவத்தை யுங்கடந் தாயபெரும் பேரொளிக்கே
தஞ்சமெனச் சென்று *தலைப்பட்டு - வஞ்சமறத்
தானந்த மில்லாத தண்ணளியா லோங்கிவரு
மானந்த மேன்பதோ ராறுடையா - னுனந்தம்

## 3. நாடு

பண்ணும் பயன்சுருதி யாகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண வரியதோரு நாடுடையா - னெண்ணெண்

## 4. ஊர்

கலையா லுணர்ந்து கருத்தழிந்து காம
நிலையான தெல்லாமும் நீத்தங் - கலைவறவே
தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தா
லோட்டற்று வீற்றிருக்கு மூருடையா - னுட்டத்தாற்

---

† 'வடிவிலா முடிவில் வாழ்க்கைக்கு இம்மை நின்று உருகுகின்றேன்' (திருமுறை 4-78-5.) * தலைப்பெய்தி.

## 5. தார்

றெண்ணீ ரருவிவிழச் சிந்தைமயக் கந்தெளிந்
துண்ணீர்மை யெய்தி யுரோமமேலா - நண்ணும்
புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாம
லுளகம்பங் கொண்டுள் ளுருகி - யளவிலா
மாலா யிருக்கு மவர்மனத்தை வாங்கவருண்
மேலாய் விளங்கலங்கன் மெய்யினுன் - றேலாத

## 6. குதிரை

வானம் புவன மலைகடலேழ் பாதாள
மூனைந்து பூதத் துயிருணர்ச்சி - ஞானமா
யெல்லாமா யல்லவா யெண்ணுவா ரெண்ணத்
தில்லாம னிற்குநீள் வாசியான் - சொல்லாரும்

## 7. யானை

பாதாள முடுருவிப் பாரேழும் விண்ணேழு
மாதார மாகி யகண்டநிறைந் - தோத
வரிதா யெளிதா யருமறையா றங்கத்
துருவா யுயிரா யுணர்வாய்ப் - பெரிதாய
வெய்யதுயர்ப் பாசமற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகளெழுப்பி - யையமுறுங்
காமக் குரோத*மத மாச்சரியங் காய்ந்தடர்த்துச்
சாமத் தொழிலின் றலைமிதித்து - நாமத்தாற்
கத்துஞ் சமயக் கணக்கின்விறற் கட்டழித்துத்
தத்தம் பயங்கொலைகள் தாங்கழித்தே - தத்திவரும்

---

* லோபமோக மதங்காய்ந்தடர்ந்து.

பாசக் குழாத்தைப் படவடித்துப் பாவையர்தம்
மாசைக் கருத்தை யறவீசி - நேசத்தா
லானவே கங்கோண் டருண்மும் மதத்தினு
லூனையார் தத்துவங்க ளுள்புகுந்து - தேனைப்
பருகிக் களித்துயர்ந்து பன்மறைநாற் கோட்டான்
மருவித் திகழ்ஞான வானையா - னிருமுச்

## 8. கோடி

சமையங் கடந்து தனக்கோப் பிலாத
சுமைதுன்ப நீக்குந் துவசன் - கமையோன்றித்

## 9. முரசு

தம்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
யிம்மை மறுமை யிரண்டகற்றிச் - செம்மையே

வாயுவை யோடா வகைநிறுத்தி வானத்து
வாயுவையு மாங்கே யுறவமைத்துத் - † தேயுறவே
யென்று மொருதகைமை யாயிருக்கு மின்பருளே
நின்று முழங்கு நெடுமுரசோ - னன்றியு

## 10. ஆணை

மாலு மயனும் வகுத்தளித்த வையமேலாஞ்
சாலுமிதற் கப்பாலு மேப்பாலு - மேலை
யுலகு முலகா லுணரவொண்ணு வூரு
மிலகி நடக்குமெழி லாணையா - னலகிறந்த

† தேயுவால்.

## இறைவன் பெருமை

காட்சியான் காட்சிக்குங் ‡ காணுன் கலைஞான
வாட்சியா ளுட்சிக்கு † மாயிலான் - சூட்சியான்

பாரும் திசையும் படரோளியா லேநிறைந்தா
றூருந் தலையுமிலாத் தோன்றலான் - வேராகி
வித்தாகி வித்தின் *விளைவாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்க டாமாகிச் - சுத்த
வேறுவேளியாய்ப் பாழாய் வேறும்பாழுக் கப்பா
லுறுபோருளாய் நின்ற வோருவன் - போறியிலியேன்

## ஞானுசாரியர்

வேம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியேன் றம்பிரா - னம்புவியோர்
போற்றுந் திருவடியேன் புன்றலைமீ தேபோறித்தோ
னேற்றின் புறத்தமைத்த வேங்கோமான் - சாற்றுவார்

சாற்றும் போருளான் றனிமுதல்வன் ருனல்லான்
வேற்றின்ப மில்லா விளங்கோளியான் - போற்றுங்
குருவேட மாகிக் குணங்குறியோன் றில்லாப்
பேருவேட மாய்நிறைந்த பேம்மான் - கருவேடங்
கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையா
னேட்டுமவர்க் கேட்டா வியல்பினுன் - மட்டவிழ்தார்

## குருபதேசம்

வானேன் பவனி வரக்கண்டு வல்வினையே
னேனேரு மேத்துதல்கண் டேத்தினேன் - ருனேன்னைப்

‡ காணுக். † ஆயினுன். * முளையாகி.

பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கோத்தையெல்
நீத்தா னினைவுவே ருக்கினு - னேத்தரிய [லா

தோண்ணூற் றறுவர்பயி ருக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமுதங் காட்டினன் - வெண்ணீறும்
வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையுமே - நாடரிய
வஞ்செழுத்தி னுள்ளீ டறிவித்தா னஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி - யஞ்செழுத்தை
யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தியதி லுச்சரிப்பு
வைச்சிருக்கு மந்த *வழிகாட்டி - யச்சமறச்
சென்று விளக்கை யெழத்தூண்டிச் செஞ்சுடரி
னென்றி யொருவிளக்கி னுள்ளொளியாய் - நின்ற

பெருவிளக்கின் பேரொளியி னுள்ளே பிரச
மருவு மலர்போன் மதித்தங் - கருவினுருக்
கொள்ளா வருளைக் கொளுத்திக் குணங்குறியோன்
றில்லா விடத்தே யினைப்பாற்றி - விள்ளாத
வுள்ள முதலாக வுற்றதெல்லாம் வாங்கவருள்
வெள்ள மயலளித்து மேவினன் - கள்ள
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கிமன மெல்லா
மிறப்பித்தா னென்பிறவி யீர்த்தான் - விறற்சொல்லுக்
கெட்டானை யார்க்கு மெழுதா வியற்குணங்க
ளெட்டானை யாற்று வெழுத்தினன் - மட்டாரும்

பாடலா ராடலார் பண்பலார் நண்பலா
ராடலா ராட லகன்பதியாங் - கூடலார்
காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்

* வழியாக்கி

பாணர்க் கிலகு பலகையிட்டான் - சேணிற்
சிறந்த வுருவான் றிருமாலுக் கேட்டா
னிறைந்த திருவுருவாய் நிற்போன் - கறங்குடனே
சூறைசுழல் வண்டு சுழல்கொள்ளி வட்ட†மன
மாறில் கருணையினுன் மாற்றினு - ணீறணிந்த
மெய்ய னமல னிமலனருள் வீடளிக்கு
105 மையனறி வுக்கறி வாயினுன் - போய்யர்பாற்

போய்மையாய் நின்றுன் புரிந்தவர்தந் நெஞ்சத்துண்
மேய்மையாய் நின்று விளங்கினுன் - கைமழுவா
னத்தன்பா னீசேன் றடையு மிடத்தையெல்லாஞ்

அடையும் இடம்

சித்தஞ்சேர் நெஞ்சமே சேப்பக்கே - ணித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
யாசைதனிற் பட்டின்ப வார்கலிக்கு - ணேசமுற
நின்று திளேக்கு மிதுமுத்தி யல்லதுவே
ரேன்று திளேக்கு மதுமுத்தி - யன்றேன்
றிலகா விருளலகை போலிகலே பேசு
110 முலகா யதன்பா லுருதே - பலகாலுந்

தாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண் டாங்கதுவே
நான்பிரம மேன்பவர்பா னண்ணுதே - யூன்றனக்குக்
கோன்றிடுவ தேல்லாங் கோலேயல்ல வேன்றுகுறித்
தேன்றுமற மேதேய்வ மேன்றேன்று - வேன்றிப்
போறையே யேனும்புத்தன் போல்லாத புன்சோன்
மிறையே விரும்பி விழாதே - நிறைமேவி

† - அன்ன பிறப்பிறப்புச் சுழல்களே என்பது கருத்து.

வாழ்பவர்போன் மண்ணுடலின் மன்னுமுரோமம்பறித்துத்
தாழ்வுநினை யாதுதுகி ருனகற்றி - யாழ்விக்கு
மஞ்சு மகற்று மதுமுத்தி யென்றுரைக்கும்
வஞ்சமணன் பாழி ‡மருவாதே - செஞ்சொல்புனை

யாதிமறை யோதி யதன்பயனென் றும்மறியா
வேதியர்சொன் மெய்யென்று மேவாதே - யாதியின்மே
லுற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே - நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே - நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே - விழித்தருளாத்
தந்தெம்மை யாண்டருளுஞ் சம்பந்த மாமுனிவ
னந்தங் கடந்தப்பா லாய்நின்றே - னெந்தைபிரான்

வீற்றிருக்கு மோலக்க மெய்தியடி வீழ்ந்திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென - வார்த்தகரி
யன்றுரித்தாய் நின்பவனி யாதரித்தா ரெல்லாரும்
வென்றிமத னம்புபட வீழ்வரோ - நின்றிடத்து
நில்லாத செல்வ நிலையென் றுனைநீங்கிப்
பொல்லா நரகம் புகுவரோ - பல்லாருங்
கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகாற் றிகைப்பரோ - முத்தம்
பொருத நகைமடவார் புன்கலவி யின்ப
மருவி மயங்கி வருவரோ - விருபொழுது
நாளிருபத் தேழு நவக்கிரக மும்நலியுங்

‡ மதியாதே

கோளிதுவேன் றேண்ணிக் குறிப்பரோ - வேளை
யெரித்த விழியாய்நின் னின்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல் - வருத்தமெலாந்
தீரா யெனவுரைத்துச் செங்கமலப் பூந்திருத்தா
டாரா யெனப்பலகாற் ருழ்ந்திறைஞ்சி - யோரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
யீங்கோன்ற வாரா யினி.

———

வேம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் ருர்வாங்கி—யம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையேல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

நெஞ்சுவிடு தூது

முற்றிற்று.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## உமாபதி தேவநாயனார்

அருளிச்செய்த

# சங்கற்ப நிராகரணம்*

### விநாயகர் வணக்கம்

(1) திருந்திய வருந்தவம் போருந்துபன் முனிவர்
கமையாக் காத லமையாது பழிச்சு
நிகரில் சேர்க்கப் புகர்முகத் தேழுந்த
புனிற்று வேண்பிறைத் தனிப்பேருங் கோட்டுத்
தழைசேவி மழைமதப் புழைநேடுந் தடக்கை
வாட்டரு மும்மை நாட்ட நால்வாய்ப்
பாச மங்குசந் தேசுறு மேயிரேன்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்கதங் கடகம் போங்கிழை யார
நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்சேவி
கோண்ட திண்பேரும் பண்டிக் குறுந்தாட்
களிறுத னிருகழல் கருதா
வேளிறுறு துயரம் வீட்டினம் பேரிதே.

---

* இச்சங்கற்ப நிராகரணம் அந்தாதித் தோடையாய்ப் பதின்மூன்றகவலாலாகியது. பதின்மூன்றினும் மிக்கதாகக் கோண்டதும் உண்டு.

## பாயிரம்

(2) பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள்
பாலரை யுணர்த்து மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளா
லருளிய கலைக ளலகில வாலவை
பலபல சமயப் பான்மைத் தன்றே யஃதா
லந்நூற் றன்மை யுன்னிய மாந்த
ரிதுவே பொருளென் றதனிலை யறைதலின்
வேற்றோர் பனுவ லேற்றோர்க் கிசையா
மாறு பாடு கூறுவ ரதனாற்
புறச்சம யங்கள் சிறப்பில வாகி
யருளின் மாந்தரை வெருளுற மயக்கி
யலகைத் தேரி னிலையிற் றீரு
மீங்கிவை நிற்க நீங்காச் சமய
மூவிரு தகுதி மேவிய தாமு
மொன்றோ டொன்று சென்றுறு நிலையி
லாறும் மாறு வீறுடைத் திவற்று
ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகி லாகம நிலவுத லுளவவை
கனக மிரணியங் காஞ்சன மீழந்
தனநிதி யாடகந் தமனிய மென்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி
யாசா ணுகி வீசிய சமத்துட
னேழஞ் சிருநூ றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்பப்

போற்போது மலிந்த வற்புத ஞானி
யாரும் விழவிற் போற்றே ராலயத்
தேரு வேண்மர் நிரையி லிருப்ப
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட வோருதலை முதுவேதிர் மணிசேர்
பேண்ணை சூழ்ந்த வேண்ணையம் பதிதிகழ்
மேய்கண் டவனருள் கைகண் டவர்களி
லோருவ ரோருதலை மருவி யிருப்ப
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தோருவ
னேதிறை யருளேன வீதேனு மாயா
வாதியை யயலினர் மறுதலைத் தருடார
மற்றவ ரயலின ரவருரை மறுத்துச்
சோற்றர வயலின ரவருந் தோலைவுற்
றின்னே யேவரு முன்னே கழியுழி
யாங்கய லிருந்த வருளின ரழகிது
நீங்கள்சங் கற்ப நிராகரித் தமையேன
மற்றவ ருரைத்த சோற்றரு போருள்கோடு
வாத சேற்ப விதண்டையு மேதுவு
மோது † நால்வகை யுவமையுந் திகழ்தர
வருள்சேர் மாந்தர் வேருள்சே ராமற்
றற்கமும் விடையமுங் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே.

---

† சிவப்பிரகாசம் 100

## நூல்

### மாயாவாதி சங்கற்பம்

### பேத்தத்தியல்பு

(3) நவிற்றிய நிரையி னவித்தையி ஞேனுரை
நித்த னறிவன் சுத்த னகண்டித
னிருவி கற்பனிர்த் தத்துவ னிரஞ்சனன்
சொல்வகை யெவையுந் தொடராத் தூய்மணி
வரம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள்
சத்தா யெவையுந் தாஞ யவித்தை
தொத்தா துயர்ந்த தொல்சுடர் மூவா
வின்ன தன்மைய னேக னநேகன்
கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்
பெற்றியி னிருந்து பொற்பணி யியல்பினின்
வான்வளி யனனீர் மண்மருந் தன்ன
மான தாது வாறைங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை
சுத்தி வெள்ளி யொத்தென மித்தையிற்
ருனென லாகுந் தன்மைத் துலூதையிற்
சின்னூற் றகைமையின் வேற்றுமை மரீஇய
தென்னப் பன்மைய தெனினிலை பழம்பூத்
தோனுர் வயிரந் தருத்தருந் தோன்மையின்
வாஞ ரந்திரை நுரைதரு வாய்மையிற்
கூடு மசித்தைச் சித்துத வாதெனி
னேற்பதர் பலாலத்திற்பரங் தருமிது
தன்னியல் பென்றும் விளையாட் டென்றும்
முன்னுள மறைகண் மொழிதலி ஞெருநூற்
பன்மணி நிலையும் பசுப்பாலெனவும்
பலவக னீரி லலர்கதி ரேனவுங்

கூவ லாழி குளஞ்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுன லெனவு
மவ்வவற் றடங்கி யாடியு ணிழலெனத்
தோன்றி யாக்கைநற் காந்தத் திரும்பும்
கனவிற் றீங்குங் கங்குலிற் கயிறும்
புனலிற் றேன்றும் பேய்த்தேர்ச் செய்தியு
மன்ன துன்பி னன்னிறப் பளிங்கெனப்
பதினுற் கரணத் தோருமுன் றவத்தை
நாளு நாளு நயந்துறு மிருபயன்
றன்னிற் சாராத் தோன்மைத் தன்மை
தர்ப்பண நிழற்கட் குற்றிபாய்ங் தற்றே

## சீவன்முத்தியியல்பு

இவ்வியற் பந்தப் பேளவம தகல
விண்முத றந்த கோண்முப் படலத்
திருளற வுதித்த காறக விவேகங்
தன்னிற் றேன்றிச் சாதக மனேத்தையு
மன்னகப் பிரிப்பு மடியிழை வாங்கலும்
போல ஞானம் போய்யறக் கழீஇத்
தானே தானுய்த் தன்னிற் றன்னேத்
தானே கண்டு தன்னல முற்று
வசையி றத்துவ மசிபதத் தேளிவா
லகமே பிரம மாயின னெனவறிங்
தசல ஞகிநற் சலம்சல மதியேனக்
கண்டிடும்

## பரமுத்தியியல்பு

உடலம் விண்டகல் கடத்து
மங்குலஃ துடைதர வேங்குமாங் தகைத்தே
யிவ்வகை யுணர்ந்து சேய்தோழி லருத

மடவோர் தாமுங் கடனு வியற்றுங்
கன்ம காண்டத் தோன்மைப் புரிவாற்
ரேற்றிய வித்தை மேற்கடை யரணியி
லேழுந்தேரி யவற்றை விழுங்கிய தேன்னத்
தன்னேழிங் துள்ள தானு யழியு
மங்ஙிலை யன்றி யழிவறு முத்தி
யேயா தேன்றுதன் னியல்பை
மாயா வாதி வகுத்துரைத் தனனே. 3

### மாயாவாதி சங்கற்ப நிராகரணம்

பிரமாணமறுப்பு :-

### வேதம் சுயம்பன்று

(4) உரைதரு பிரம மோன்றேனு முரைக்கண்
வருபிர மாண மறையேனி லருமறை
யோன்றேன்ற தன்றி யிருபோரு ளுரைத்த
னன்றன் றபேத நாடிய போருளேற்
பேதமு மபேதமு மோத வேண்டா
பேத மேனினு மபேத மேனினும்
பேதா பேத மேனினு மமையுநின்
னேயமி லுரையிற் பையவங் துளதாங்
திகழ்பிர மாண விகழ்வுமுண் டன்றிப்
பேத்தம் பேத முத்தி யபேதமே
லாவத் திதமா மவையிரு திறனு
மினியப் பழமோழி யிரண்டல வோன்றே
யன்றியும் பேத்தம் பேதத் தறைதலு
மோன்றிய முத்தி யபேதத் துரைத்தலும்
பழுதா மித்திறம் பதையா தாய்கமற்

றெழுதா மறையெனு மிப்பிர மாண
மாருரை தானே யாயின தேலுன
தேக மநேக முறுமியம் பாமற்
சத்த ரூபந் தகாதெனில் வானத்
தோத்தொலி யுறழு மெனில்வறி துதியா
தன்றியும் பதமும் பாழியு மனைத்து
மின்றியோ ரொலியா யெழுந்திடு மதனுக்
கறிவில துருவில தறியா தறையா
தன்றியு மவ்வகை யகண்டித மதுவிது
வென்றது குறிப்ப தெவ்வகை யாவு
மொன்றெனு முரையு மொழிந்தனை யன்றே
யருமறை பிரம வுரையெனி லதற்குத்
தந்த தாலு முதனவில் பொறியில
தென்னிலோ ருடற்கண் மன்னிய வலகை
யறைந்தற் றென்ப தார்சொல தமலத்
திறம்பெற் றின்றே செய்தோர் பெயராற்
சுயம்பு வென்றுல கியம்புமென் றறியினித்
‡ தற்கீட் டலைவரைத் தான்றெழு துரைக்குஞ்
சொற்கேற் புரவல னேவ லமைச்சரை
யடிகண் மற்றெங் குடிமுழு தாண்மினென்
றேத்தி யிறைஞ்சிக் காப்பர்க ளென்றுங்
கீச ளுஞ்செயப் பேசின னன்றி
யினையவை பிறரிற் கனவினு மிலனே
தன்னைத் துதிக்குஞ் சொன்னலந் தானுமத்
துறையறி வாணர்க் கறைவதொன் றன்றியுந்
தனக்குத் தானே தன்னலம் பகரா
தசத்துக் குரையா தார்க்குரை யுயிர்க்கெனி

---

‡ தற்கீழ்த் தலைவரை

லுரைபிர மாண மிறைபிர மேய
நீபிர மாதா நின்பிர மிதியென
நால்வகை யுளதுன தேகநன் றன்றே
நற்பிர மாண நிற்பதோன் றன்று
லப்பிர மேயமு மதனியல் பன்றே

பிரமேயமறுப்பு :-

பிரமம் பிரமேயமன்று

கன்னற் சுவையி லந்நிய மிலதா
லினிமை தோன்ருத் தனிமைத் தேன்றனே
யறிவிற் குவமை யசத்தாங் கட்டி
பிறிவித் தோட்டினும் பேற துருதே
தற்பர விரிவு போற்பணி தகுமேனிற்
† செய்வோ ரின்றிச் செய்வினை யின்மையிற்
போன்பணி யாகை தன்பணி யன்றே
செய்வோர் போலாச் செயப்படு போருண்முதற்
செய்வோ ரேயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியிற் ருேன்றிற் ருயினுஞ்
சத்துல கேதுந் தாரா தருமேனி
னுலக மித்தையேன் ருேரா துரைத்தனே
நிலவுநின் மரபு நினைந்திலே யாங்கோல்
விவகா ரத்தில் வேண்டுது முலகம்
பரமார்த் தத்திற் பகரா மேன்னிற்
பரத்துள தேலிவை யும்பர மார்த்தம்
பரத்தில தேலொழி முன்பகர் மாற்ற
மதன்முத லிதுவேன வுதவுக வன்றியும்

---

† சிவஞானபோதம் சூ. 1, உரை.

விவகரிக் குங்காற் றிகழ்பர மார்த்த
நிலையது தெரியி னிதுநீ நீயேற்
றெரியா தாயி னஃதுந் தெரியா
துரையா ரளவையு மொழிந்தனை யன்றே
யளவை காண்டல் கருத லுரையென
வுளதவை மூன்றின் மொழிவழி நுழையி
னின்பிர மேய மென்ப தெனுங்கோல்

## பிரமிதி மறுப்பு

பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாநின்
றற்பர மசித்தைத் தருமா றென்னெனிற்
சிலம்பி நூறரு நலம்போற் றுரென்று
மென்றனை யதுவ தன்றுரேழி லன்றியு
மொன்றத னியல்புல கோரியல் பன்றெனப்
பலமிலை பழம்பூப் பாதவந் தருநீர்
திரைநுரை திவலை சிலதரு மிவைபோற்
ருனே பலவா மெனநீ சாற்றினை
சத்தசத் தாகவுஞ் சத்தினி லசத்தின்
கோத்துள தாகவுங் கூறின ரிலரால்
வித்திலை கனிநனி விழுதா றருநெறி
சத்தல தோன்று தான்றர வேண்டு
நெற்பதற் பலாலத் திற்குபா தானமென்
காரண மின்றிக் காரியம் பிறவா
பாரிடை யொருபடம் பண்ணவும் படுமே
யந்தமில் பிரம மவித்தைகா ரணமெனத்
தந்தனை யவித்தை தானெய் துறுத
றன்னியல் பென்னில் வன்னிதன் வெம்மையிற்

